உ

# கல்வி நிலை.



ஆசிரியர்

## செகவீரபாண்டியனார்



மூன்றாம் பதிப்பு.

மதுரை
வாசுகி அச்சகத்தில் பதிப்பிக்கப் பெற்றது.
1959.

# முகவுரை.



இந்நூல் கல்வியின் நிலையைக் கருதி ஆய்ந்த ஓர் ஆராய்ச்சியை உடையது. அறிவு, நூல், கல்வி, கவி, கவிஞன் என்னும் ஐந்து பொருள்களைக் குறித்து ஆராய்ந்து வந்துள்ளது. கலையின் பண்புகளையும் நிலைகளையும் உரிமையோடு தழுவி வந்துள்ளமையால் இதனை ஆவலோடு பயின்று வருபவர் அரிய பல பொருள்களை அறிந்து கொள்ளலாம்.

உலகில் உலாவி வருகிற உயிரினங்களுள் மனித சமுதாயம் தனி நிலையில் உயர்ந்து நிற்கிறது. அந்த உயர்ச்சிக்கு உரிய மூலகாரணங்கள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. மனிதன் பிறக்கின்றான்; இருக்கின்றான்; வளர்கின்றான்; வாழ்கின்றான்: மறைந்து போகின்றான். இந்த நிலைகளையே உலகம் நிலையாகக் கண்டு வருகிறது. நிலையில்லாத உலகத்தில் நிலையாக நிலைத்து வருவதை நினையுந்தோறும் வியந்து வருகிறோம். மனிதன் எங்கே போகிறான்? ஏன் இங்கே வருகிறான்? எதன் பொருட்டு அலைகிறான்? என்ன செய்யக் கடமைப் பட்டிருக்கிறான்? எதனால் இந்தப் பிறப்பு இறப்புகள் நேர்ந்தன? எப்பொழுது தொடங்கின? என்பன யாரும் யாதும் அறிய முடியாத பெரிய இரகசியங்களாயுள்ளன.

"Man is a stream whose source is hidden." (Emerson)

"ஊற்று மூலம் தெரியாத நீர் ஓட்டம்போல் மனிதன் நிலவியுள்ளான்" என மனிதருடைய நிலைமையைக் குறித்து அமெரிக்க மேதை ஆன எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார்.

அறிய முடியாத அரிய நிலையில் வந்துள்ள மனிதன் எதனை அறிந்து கொள்ள வேண்டுமோ அதனை அறிய வுரிய வனாய் நேர்ந்துள்ளான். மனிதன் இயற்கையாகவே அறிவு டையவன்; அந்த அறிவு செயற்கை இனம் தழுவி வளர்ந்த போதுதான் அவன் உயர்ந்து திகழ்கிறான். இயற்கையாய் அமைந்தது நிலை அறிவு; அது கலையறிவோடு கலந்துவரின் தலையறிவாய்த் தழைத்து விளங்குகிறது. அந்தஅறிவு விளக் கம் மனிதனுக்குப் பெருமகிமையைத் தருகிறது. தன்னுள் இயல்பாய் அமைந்துள்ள அறிவு முன்னோர்களுடைய அறிவு நலங்களோடு மருவி மனிதனிடம் இனிது பெருகி வருவதையே கல்வி என்று நாம் சொல்லி வருகின்றோம்.

மனிதனைத் தெய்வமென மாண்புறுத்தும் கல்வி
இனிததற் கில்லை எதிர்.

என்றதனால் கல்வியின் மகிமையை நன்கு தெரியலாம்.

அந்தக் கல்வி நல்ல நூல்களில் நிறைந்துள்ளது. கவிக ளாகவும், வசனங்களாகவும் அவை பெருகி வந்துள்ளன. அவற்றை ஆக்கியருளிய மேலோர்களை உலகம் யாண்டும் வழி முறையே உவந்து புகழ்ந்து போற்றி வருகின்றது.

மொழிகளின் வழியே உணர்வின் ஒளிகளை அருளி உயி ரினங்களுக்கு உறுதி நலன்களை உதவியிருத்தலால் கவிஞர் கள் பேருபகாரிகளாய்ச் சீர்மையும் சிறப்பும் பெற்றிருக் கின்றனர். அறிவுலகத்தின் சிருட்டி கருத்தர்களாய் நிலவி யுள்ள அவரது தலைமையையும் கல்வியின் நிலைமையையும் இந்நூல் ஓரளவு உணர்த்தியுள்ளது. உண்மைகளை ஊன்றி உணர்ந்து நன்மைகளை நாடி அடைந்து கொள்ள வேண்டும்.

இங்ஙனம்
செகவீரபாண்டியன்.

## உள்ளுறை.







மனிதனுக்குக் கண்கள் மதியுயர் கல்வி
புனிதமாக் கொள்க புனைந்து.

## கல்விக் கதிர்

பரிதி வானவன் ஒளிசெய்து பாரினை என்றும்
பெரிது பேணியே பேரருள் புரிகுவன் அதுபோல்
அரிதின் வந்துள மானிடர்க்கு அறிவொளி அருளி
உரிய மேன்மைசெய் கல்வியை உவந்துளம் தொழுவாம்.

## கல்வித் தாய்

மன நலம் மதி நலம் மருவி மன்னுயிர்
இன நலம் ஆய்வர இனிய கல்வியே
அனைஎன அளிபுரிந்து அருளும் அன்னதை
நனவிலும் கனவிலும் நாடி வாழுக.

## கல்வி நலம்

செல்வவளம் இருந்தாலும் சீர்கள்பல
செறிந்தாலும் சிறந்த மேன்மை
பல்வகையில் அமைந்தாலும் பயனிலவாய்ப்
பழுதுபடும் பண்பு வாய்ந்த
கல்விநலம் ஒன்றின்றேல் கண் இழந்த
குருடனாய்க் கழிவான் அந்தோ!
ஒல்லையிதை உணர்ந்துநீ உயர்கல்வி
யாளனாய் உயர்க ஓர்ந்தே.

உ

# கல்வி நிலை.

## முதல் அதிகாரம்

### அறிவு.

அறிவு மனிதனை மகிமைப் படுத்தி வருகிறது. இந் நிலவுலகில் நிலவியுள்ள சீவ கோடிகள் அளவிடலரியன. எல்லையில்லாத அந்த உயிரினங்களுள் மனித மரபு உயர் நிலையில் தலைசிறந்து மிளிர்கிறது. உயர்ந்த இந்த மேன்மைக்குக் காரணங்கள் பல உள. அவற்றுள் எல்லாம் அறிவு முதன்மையாயுள்ளது. கூரிய சீரிய அறிவால் பேரியல்புகள் பெருகி வந்துள்ளன. மனிதன் எண்ணி யுணரும் இயல்பினன். நுண்ணிய அறிவுடையவன். எதையும் நுணுகி ஆராய்கிறான். முன்னும் பின்னும் எண்ணி அறிகிறான். சென்ற காலச் செலவுகளையும் வருங்கால வரவுகளையும் நிகழ்கால நிலைகளையும் தொகை வகையாக நேரே நினைந்து சிந்திக்கின்றான். சிந்தனையில் தெளிந்து வந்த தெளிவுகள் வாழ்வின் அனுபவங்களாய் ஒளிசெய்து வருகின்றன. மனிதனுடைய வாழ்வு பலவகையான தொடர்புகளோடு படிந்து பழக்க வாசனைகள் மலிந்து வழக்கமாய்த் திகழ்ந்து வருகிறது.

உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க மனை முதலிய வாழ்க்கை வசதிகளைச் சுவையாகவும் உயர்வாகவும் பெருமையாகவும் பேணி மனைவி மக்கள் ஒக்கல்களுடன் கூடிச்

சுகபோகமாய் வாழ்ந்து வருவதையே மனிதன் யாண்டும் சூழ்ந்து வருகிறான். தன் வாழ்வு இனிது நடந்து வர எவ் வழியும் மூண்டு முயன்று யாண்டும் நீண்டு நிற்கின்றான்.

அரிய உயர்ச்சிகளுக் கெல்லாம் உரிய முயற்சி மூல காரணமாய் மருவி யிருக்கிறது. அது பயிற்சியால் பண்பாடு அடைந்து நிலைமைக்குத் தக்கபடி பலன்களைப் பயந்து வரு கிறது. செயல், கருமம், வினை, தொழில் முயற்சி என வருவன மனிதன் முயன்று செய்யும் நிலைகளை விளக்கி நிற் கின்றன. கருத்து ஊன்றிக் கருதிச் செய்த கருமம் விருத்தி யடைந்து வியன்பயன் தருகிறது. கருதாமல் செய்வது விருதாவாய் விளிந்து போகிறது. செய்யும் வினையைத் திருந்தச் செய்தவன் தெய்வம் செய்தவனாய்ச் சிறந்து வரு கிறான். தெய்வம்—விதி. முயன்று வருபவனைத் தெய்வம் உவந்து பேணி உயர்ந்த பலன்களை உதவி வருகின்றது.

உழைப்பின் வழியே பிழைப்பு நடந்து வருதலால் அதன் நிலைமையும் நீர்மையும் நேரே தெரிய நின்றன. உழைக் கும் ஒருவனே உண்ண உரியவன் எனக் கண்ணன் கூறி யுள்ளமையால் உழைப்புக்கும் பிழைப்புக்கும் உள்ள உற வுரிமைகளை உணர்ந்து கொள்ளலாம். கருமங்களுள் தருமங் கள் மருமமா மருவி யிருக்கின்றன. அறிவு நலங்கலந்துவரின் அது அதிசயமுடையதாய்த் துதி செய்யப் பெறுகின்றது.

தேக முயற்சி 1
மன முயற்சி 2
அறிவு முயற்சி 3
ஆன்ம முயற்சி 4

என ஆள்வினைகள் இவ்வாறு சீரா எண்ணப்பட்டுள்ளன.

தேக முயற்சி ஆவது உணர்வுநலம் புணராமல் உடலளவில் உழைப்பது. கடுமையாகப் பாடுபடுவதால் இது மாட்டுப் பாடு என நேர்ந்து பலனும் மட்டாய் வந்தது.

மனமுயற்சி ஆவது கொஞ்சம் சிந்தனையோடு செய்வது. நெசவு வாணிகம் முதலியன இதனுள் அடங்கும்.

அறிவு முயற்சி என்பது கலைபறிவோடு கலந்து புரிவது. மந்திராலோசனை, நியாயவாதம், நீதி தெளிதல், ஓவியம் புனைதல், காவியம் வரைதல் முதலியன இதில் மருவி வருகின்றன. மதிநலம் வாய்ந்தது அதிநயமாய் விதியே வந்தது.

ஆன்மமுயற்சி என்பது ஞானசீலம் தோய்ந்தது. அரிய தவம் முதலிய பெரிய நிலைகள் இதில் பெருகி எழுகின்றன.

குறித்த நான்கும் ஒன்றைவிட ஒன்று உயர்ந்தது.

ஒருநாள் முழுவதும் உழைக்கும் தேக முயற்சிக்கு ஒரு பொன் கூலி ஆனால் அதே அளவுள்ள மன முயற்சிக்குப் பத்துப் பொன். அறிவு முயற்சிக்கு நூறு பொன்; ஆன்ம முயற்சிக்கு ஆயிரம் பொன். முயற்சியின் வகை அளவே உயர்ச்சியும் பயனும் உளவாகின்றன. எந்த எந்த நிலையில் நின்று முயல்கின்றானோ அந்த அந்த வகையிலேயே உலகிற்கு அவன் பயன்படுகிறான். இனவுரிமைகளைத் தழுவிச் சமுதாயங்கள் முறையே இனிது இயங்கி வருகின்றன.

உடல் உழைப்பால் விளைகின்றன உடல்களை வளர்க்க உதவுகின்றன. அதற்கு மேலேயுள்ள அறிவின் பசிக்கும் சுவைக்கும் அவை உதவாது போகின்றன. நிலைமைகளின் அளவாய் நீர்மையும் சீர்மையும் நேர்ந்து நிற்கின்றன. தலைமையான அறிவால் உலகம் பலவகை நலங்களை யடைந்து வருகிறது. அறிவின் பலன்கள் வாழ்வின் வளங்களாம்.

## அறிவு முயற்சி.

கலைஞானிகள் செய்கின்ற சிறந்த நூல்களே அறிவுக்கு உயர்ந்த இன்பங்களை ஊட்டி யருளுகின்றன. உத்தமமான புத்தி தத்துவத்தில் விளைந்து வருவன உணர்வுகளுக்குப் புதிய போகங்களாய்ப் பொங்கி அதிசய இன்பங்களை அருளுகின்றன. மதிநலம் சுரந்து வருவதில் மகிமைகள் மிகுந்து அரிய பல சுவைகள் பெருகி வருகின்றன. புலமை நலம் கனிந்த தலைமையான அந்த அறிவின் விளைவு இல்லையானால் இவ்வுலகம் களையடர்ந்த காடுபோல் பொலிவிழந்து போம். மேதையின் விளைவுகள் மேன்மைகள் புரிகின்றன.

"There must be work done by the brains, or the life we get would not be worth having." (Ruskin)

"அறிவாளிகள் அறிவால் வேலை செய்ய வேண்டும்; இல்லை ஆனால் நமது உயிர்வாழ்வு தகுதியாய் இராது." என ரஸ்கின் என்னும் ஆங்கில ஆசிரியர் இங்ஙனம் கூறியுள்ளார். இவ்வுறுதிமொழியிலுள்ள பொருள் நிலைகள் ஊன்றி உணர வுரியன. அறிவின் விளைவுகள் அதிசயங்களை அருளுகின்றன.

கலையறிவு உலக வுயிர்களின் நிலைகளை உயர்த்தி ஒளி பெறச் செய்கிறது. திருவள்ளுவர், கம்பர் முதலிய கலைஞானிகளுடைய மேதா விலாசம் மேலான அமுத வெள்ளமாய் மேவி அருயிர்களுக்கு அறிவின்பங்களை அருளியுள்ளது.

நல்ல உள்ளமுடைய ஒருவன் உண்மையாகப் பயின்று தெளிந்த அறிவு உலகம் முழுவதும் உவந்து மகிழ நன்மையுடையச் செய்கின்றது. சிறந்த மேதைகளுடைய உழைப்புகள் மனித சமுதாயத்துக்கு உயர்ந்த நலங்களை உரிமையோடு உதவி வாழ்வுகளை நன்கு வளம்படுத்தி வருகின்றன.

மின்சார ஒளியும், வான் ஒலியும், ஒலிப் பதிவும் வெளி வரச் செய்த அந்த மனித அறிவு எவ்வளவு மகிமையுடையது! எத்தகைய மதிப்பு வாய்ந்தது! உடல் உழைப்பிற்கும் புத்தி வேலைக்கும் உள்ள வித்தியாசங்கள் எத்துணை நிலையின! உய்த்து உணருக. அறிவின் அசைவுகள் அதிசயசோதிகளாய் யாண்டும் ஒளிவீசி நிற்கின்றன. கலை நிறைந்த மதி வானில் எழுந்து ஒளியும் இன்பமும் உதவி வருதல் போல் கலைமதியும் உலகில் உயர்ந்து பலவகை நலங்களைப் பயந்து எழிலொளிவீசி இன்பம் புரிந்து வருகிறது. விலங்கு பறவை முதலிய பிராணிகளிடமும் அறிவு நலங்கள் சில வழிகளில் வெளியே காணப்படுகின்றன. படினும் காரண காரியங்களோடு அவை பூரணமாகப் பொருந்தாமையால் பொலிவிழந்து மெலிவடைந்து நலிவாய் நைந்து போயுள்ளன.

| | |
|---|---|
| யானை | யூகம் உடையது. |
| சிங்கம் | தைரியம் வாய்ந்தது. |
| குதிரை | விசுவாசம் தோய்ந்தது. |
| எருமை | பொறுமை யுடையது. |
| கழுதை | அமைதி யானது. |
| நாய் | நன்றியறிவு மிகுந்தது. |
| நரி | தந்திரம் ஆனது. |
| பன்றி | அஞ்சாமை அமைந்தது. |
| கருடன் | கம்பீரம் விரிந்தது. |
| கழுகு | கூரிய பார்வையுடையது. |
| காக்கை | இனம் தழுவி உண்பது. |
| கொக்கு | கருமமே கண்ணுனது. |
| சேவல் | வீரம் மிக்கது. |
| தூக்கணங் குருவி | வாழ்க்கைச் சிறுடையது |

தேன் ஈ முயற்சி யுள்ளது.
எறும்பு வருமுன் காப்பது.

இன்னவாறு மிருகங்களிடமும் பறவைகள்பாலும் சில தன்மைகள் இயல்பாகவே சார்ந்து இனமுறைகளோடு தோய்ந்திருக்கின்றன. இருந்தாலும் அவை உயர்வாய் மதிக்கப்படாமல் இழிவாகவே எண்ணப்பட்டு உள்ளன.

இந் நிலைக்குக் காரணம் என்ன? கருதி யுணரின் உரிய உண்மைகள் தெரிய வருகின்றன. பகுத்து அறியும் திறனும் பான்மை இனமும் மேன்மையாய் ஒருசேர அமையாமையால் அவை கீழ்மையாய் நிற்கின்றன. இழிவும் உயர்வும் பல வழிகளில் விழிதெரிய நேர்கின்றன. வெளியே தோன்றுகின்ற தோற்றங்களுக்கெல்லாம் உரிமையான காரணங்கள் மருமமாய் உள்ளே ஊன்றி உறைந்திருக்கின்றன.

உணர்வு நலங்களோடு கலந்து பல குண நீர்மைகளும் ஒருங்கே சேர்ந்துள்ளனமயினலேதான் மனிதன் உயர்ந்த நிலையில் சிறந்து ஒளி வீசி உலாவுகின்ருன். அறிவோடு மருவிய குண சமுதாயங்களே மனித சமுதாயத்தை யாண்டும் மகிமைப்படுத்தி எவ்வழியும் உயர்த்தியருளுகின்றன.

அறிவும் பண்பும் மனிதனுக்கு ஒளியும் இன்பமும் உதவி உரிமையோடு உயர்ந்த மேன்மைகளைச் செய்து வருகின்றன. இந்தப் பாக்கியங்களை இழந்தவர் மடையர், கொடியர், மூடர், முருடர் என மிடியுற்று நிற்கின்றனர். இவற்றை உடையவர், யாவும் உடையராய் இருமையிலும் பெருமை பெற்று வருகின்றனர். வரவே இவை தெய்வத் திருவுகளாய் உய்வைத் தந்து ஒளி புரிந்துள்ளன. கருதிய மேன்மைகளையெல்லாம் உரிமையோடு தருகிற அரிய அதி-

சய நிதியமாய் அறிவு மருவியுள்ளமையால் அதன் தலைமை யும் நிலைமையும் அருமையும் பெருமையும் பேச வந்தன.

> அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
> என்னுடையர் ஏனும் இலர். (குறள், 430)

புறத்தே வேறுபொருள் இலராயினும் அகத்தே அறிவு உடையவர் எல்லாச் செல்வங்களும் ஒருங்கே உடையவரே; உள்ளத்தில் அறிவு இல்லாதவர் உலகத்தில் எவ்வளவு செல் வங்களை எய்தி யிருந்தாலும் யாதொன்றும் இல்லாதவரே யாவர் என அறிவின் மகிமையை யாவரும் எளிதே அறியத் தேவர் இவ்வாறு தெளிவாக விளக்கியுள்ளார். இந்த விளக் கத்தில் அரிய பல சிந்தனைகள் விளங்கியுள்ளன. அறிவு நிலை யை அறிவது பெரிய அறிவாய் உரிமை தோய்ந்து வந்தது.

எல்லாம் அறிய வல்லவன் என்று இறைவனுக்கு ஒரு பெயர். ஆகவே அறிவு பரமான்மாவின் ஒளி என்பது தெளி வாய நின்றது. அந்த ஒளி சிவான்மாவிடம் துளியாய் வந் துள்ளது. அதனால் மனிதன் அரிய பல கலைகளையும் பெரிய நிலைகளையும் அறிந்து கொள்ளுகிறான். அறிவு சிவ ஒளியாய் விளங்கித் தேவ அமுதமாய்ச் சுரந்து திவ்விய இன்ப நலங் களை நன்கு அருளி எவ்வழியும் சீர்மை புரிந்து வருகிறது.

அறிவன், கலைஞன், கவிஞன், ஞானி என உலகில் எழுகின்ற எவரும் அறிவின் பரிபாகத்தால் பெருகி வந்துள் ளனர். உயர்ச்சி நிலை உணர்ச்சியின் வளர்ச்சியாய் வந்தது.

அறிவு மனிதனுக்கு அரிய பெரிய ஓர் அதிசய செல்வ மாய் அமைந்திருக்கிறது. அதன் தெளிவுக்குத் தக்கபடி ஒளியும் இன்பமும் பெருகி வருகின்றன. அதனையுடையவன் எல்லாம் உடையவனாய் இசை மிகப் பெற்றுள்ளான். அது

ஒன்று இல்லையானால் யாதும் இலனாய் ஏதம் அடைந்து இழிவுறுகின்றான். ஒளி இழந்த கண்போல் அறிவிழந்தவன் அவலம் அடைந்து நிற்கின்றான். அரிய காட்சிகளை அருளி உயிரின் இனிய கண்ணாய் அறிவு ஒளி சிறந்து உள்ளது.

பொருள் புகழ் புண்ணியம் முதலிய உயர் நலங்களை எல்லாம் ஒருங்கே விளைத்தருளுதலால் அறிவு தெய்வீகமான ஒரு சிவ நிதியமாய்ச் சிறந்து திகழ்கின்றது. தெய்வத்தரு, சிந்தாமணி, காமதேனு என அது சேம நலங்களைச் செய்தருளுகிறது. மனித வாழ்வைப் பலவகையிலும் வளமுறச் செய்து அறிவு மாட்சி புரிந்து வருதலால் அதன் ஆண்மை ஆற்றல்களை யாண்டும் காட்சியாக் கண்டு கொள்ளலாம்.

"புத்திமான் பலவான் ஆவான்"

என்பது பழமொழி. இம் முதுமொழி அரிய பல பொருள்களை மதிதெளியச் செய்துள்ளது. அறிவாளி எவ்வழியும் வெற்றி வீரனாய் வீறு கொண்டு நிற்கின்றான். பொருளை ஆக்கவும், நல்ல பலன்களை நோக்கவும், வாழ்க்கைகளைச் செவ்வையாக நடத்தவும் அறிவு இனிய கருவியாய் மருவியுள்ளது. அதனிடம் அதிசய ஆற்றல்கள் பெருகியிருக்கின்றன. பயிற்சி நிலையில் அது உயர்ச்சியாய் வருகின்றது.

"Knowledge is power." (Bacon)

"அறிவு வல்லமையுள்ளது" என ஆங்கிலப் புலவராகிய பேக்கன் இவ்வாறு கூறியிருக்கிறார். அதன் வன்மையும் தன்மையும் பல வழிகளிலும் உயர்ந்து ஒளி புரிந்து உறுதி நலங்களை அருளி யாண்டும் எழில் மிகுந்து வருகின்றன.

"A man of knowledge increaseth strength." (Bible)

"அறிவுடையவன் ஆற்றல்களை வளர்த்துக்கொள்கிறான்"

எனச் சாலமன் என்னும் நீதிமான் இங்ஙனம் உரைத்திருக்கிறார். அறிவால் அரிய உறுதிகள் பெருகி வருகின்றன.

"அறிவு அற்றம் காக்கும் கருவி" (குறள்,—421)
"அறிவுடையார் ஆவது அறிவார்" (குறள்,—427)

தேவர் இவ்வாறு அறிவின் திறனை இனிது அருளியுள்ளார்.

மணிக்கு ஒளிபோல் மனிதனுக்குஅறிவு மகிமைதருகிறது. ஒளியிழந்த மணிஇழிவுறுதல்போல் அறிவிழந்த மனிதன் கழிவுறுகின்றான். அறிவு குறைய அவலம் நிறைகிறது.

அறிவினுன் மாட்சியொன் றில்லா ஒருவன்
பிறிதினுன் மாண்டது எவனும்?—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையும்மற் றின்ன
அணியெல்லாம் ஆடையின் பின். (பழமொழி)

உடலுக்கு உடைபோல உயிருக்கு அறிவு என முன்றுறையரையனார் இங்ஙனம் குறித்திருக்கிறார். ஆடையின்றி அணிகளை மாத்திரம் அணிந்து கொண்டு ஒருவன் நிற்பான் ஆனால் எல்லாராலும் அவன் எள்ளி இகழப்படுவான்; அது போல் அறிவு இல்லாமல் வேறு எவ்வளவு செல்வங்களை எய்தியிருந்தாலும் அவன் நன்கு மதிக்கப்படான் என்பதை இவ்வுவமையால் இங்கேஇனிது உணர்ந்து கொள்ளுகிறோம்.

அறிவின் மாட்சியை எளிதே காட்சிப்படுத்தித் தெளிவாக விளக்கி யிருப்பது வியம் மிகவுடையது. ஆன்ம ஒளியாய் எவ்வழியும் மேன்மை எய்தி வருதலால் அறிவின் திவ்விய நிலைமையும் செவ்விய தலைமையும் தெரியலாகும்.

சூரியனுடைய ஒளியால் உலகம் நிலையாய் இயங்கி வருதல்போல் அறிவின் வழியே உயிரினங்கள் யாண்டும் தொழில்புரிந்து வழிமுறையேவளமாவாழ்ந்துவருகின்றன.

2

இம்மை மறுமை முதலிய நிலைகளையெல்லாம் எதிரறிந்து நன்மை அடைந்து மாந்தர் உய்திபெற ஒளி நீட்டி வழி காட்டியா யிருத்தலால் அறிவுக்குக் காட்சி என்று ஒரு பெயர் அதனுடைய மாட்சிமை தெரிய மருவி வந்துள்ளது.

உலகப் பொருள்களைக் கண்கள் காண்பதுபோல் உண்மைப் பொருளை அறிவுகாண்கின்றது. புனிதமான தெளிந்த அறிவால் மனிதன் இனிய பேரின்ப நிலையை எதிரே தெரிகிறான். அதனைப் பெறுவதே பேறு என்று உணர்கின்றான்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு." (குறள்,358)

உண்மையான அறிவுக்கு உரிய பயனை இது உணர்த்தியுள்ளது. உரிமையை உணர்வதே யாண்டும் பெருநம்பாம்.

பிறவி துன்பம்; பிறவாமை இன்பம். தன்னை மறந்து மருண்டு புன்மைகள் புரிந்தமையால் பிறப்புகள் நேர்ந்தன. நேரவே மாயச் சுழல்களில் ஓயாமல் உயிர்கள் உழன்று வரலாயின. அல்லலான இந்தப் பொல்லாத பிறவி நீங்கிப் பேரின்ப நலனைப் பெறுவதே மனிதன் பெற்றுவந்துள்ள அறிவுக்கு உற்ற பயனும். அந்த உண்மையான உரிமையைத் தேவர் இங்ஙனம் உலகம் அறிய உணர்த்தி யிருக்கின்றார்.

தம்மைப் பெரிய அறிவாளிகளாக எண்ணிப் பெரிதும் களித்துள்ளவர் இங்கே வள்ளுவர் குறித்துள்ளதைக்கூர்ந்து நோக்கி உண்மையை ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும்.

எதை அடைந்தால் எல்லாம் அடைந்தது ஆமோ அதை அடைந்து கொள்ளுவதே உயர்ந்த அறிவாம். துயரங்கள் யாவும் நீங்கி உயர் பேரின்பமாய் உய்தி தருவதே மெய்யறிவு என மேவியுள்ளது. அறிவின்உரியபயன்உணரவந்தது.

"தன்னை அறிவது அறிவு; பின்னை அறிவது பேயறிவு" என்றார் திருமூலர். மனிதன் உரிமையாய் அறிய வுரியது எது? அதனை இங்ஙனம் அவர் நன்கு அறிவித்துள்ளார்.

"அறிவை அறிவதே ஆகும் பொருள்என்று
உறுதிசொன்ன உண்மையினை ஒருநாள் எந்நாளோ?
தூய அறிவான சுகரூப சோதிதன்பால்
தீயில் இரும்புஎன்னத் திகழும்நாள் எந்நாளோ?"

எனத் தாயுமானவர் இவ்வாறு இறைவனை நோக்கி மறுகி யுருகி யிருக்கிறார். அறிவு மயமாயுள்ள பரமனை மருவி ஆனந்தமயமாய் இருப்பதே ஆன்ம உய்தி என்பது அறிய வந்தது. அறிவின்நீர்மையும் சீர்மையும் நிலைமையும் தலைமையும் நெடிது சிந்திக்கவுரியன. சிந்தனையளவு தெளிவுகள்உளவாம்.

## அறிவு நிலை

அறிவு இயற்கை செயற்கை என இருவகை நிலையில் பிரிவு கொண்டு உள்ளது. பிறப்புரிமையில்இயல்பாய் அமைந்தது இயற்கையறிவு என நேர்ந்தது. கல்வி கேள்வி சிந்தனை முதலிய பயிற்சிகளால் விளைந்து விரிந்தது செயற்கையறிவு என வந்தது. அறிவின் வளர்ச்சி அதிசய உயர்ச்சியாகிறது.

இயல்பான அறிவு அயலே சூழ்ந்துள்ள அறிவினங்களோடு கலந்த பொழுதுதான் உயர்வாய் ஓங்கி ஒளி வீசி மிளிர்கின்றது. இயற்கையறிவு குட்டத்து நீர்போல் கட்டுக் கடையாய்க் கழிந்து கிடக்கின்றது. செயற்கையறிவு வான மழைபோல் வந்து பாய்ந்து ஞானவெள்ளமாய்ப் பொங்கி எழுகிறது. வித்தாயிருந்தது விளைவாத்தழைத்துவருகிறது.

இயற்கையான வயிரமணி இனம் தெரியாமல் இழிந்து கிடக்கின்றது. அது செயற்கையோடு தோய்ந்து பட்டம்

கட்டியபின் ஒளியும் மதிப்பும் வாய்ந்து உறுதிநிலை சேர்ந்து எவ்வழியும் உயர்ந்து பெருகிச் சிறந்து விளங்குகின்றது.

மனிதனும் இந்த மணிபோல் மருவி யிருக்கிறான். பிறந்த அறிவோடு இருந்துவரும் வரையும் அவன் உயர்ந்து திகழான். சிறந்த கல்வியறிவோடு கலந்த போதுதான் அவன் உயர்ந்த மனிதனாய் எங்கும்ஒளிபெற்று நிற்கின்றான்.

கல்லாத மனிதன் கல்லாய் இழிந்துள்ளான். கற்றவன் கதிர்மணியாய் உயர்மகிமை பெறுகின்றான். கல்வி இல்லையானால் அந்த மனிதன் இருகால் விலங்காய் எவ்வழியும் இழிவுறுகின்றான். அதனையுடையவன் பெரிய மனிதனாய் அரிய மேன்மைகளை அடைகின்றான். கல்லாமையுள் பொல்லாத சிறுமைகள் புகுந்து கொள்கின்றன; கல்வியுள் எல்லாப் பெருமைகளும் இனமா இசைந்து நலமா நிற்கின்றன.

கல்வியறிவு பலவழிகளிலுமிருந்து பெருகி வருகிறது. கண்ணால் கண்டும், காதால் கேட்டும், உணர்வால் ஓர்ந்தும் அறிவுநலங்களை மனிதன் அடைந்து கொள்ளுகிறான். அந்த அறிவுத் துறைகளுக்கெல்லாம் மூல நிலையங்களாய் நூல்கள் அமைந்துள்ளன. நூலோர் மேலோர் என்ற வழக்கு நூல்களின் நிலைமை நீர்மைகளையும் தலைமை மேன்மைகளையும் நன்கு விளக்கி நலன்கள் பல துலக்கி நயமாய் நிற்கிறது.

மனிதன் எதனால் உயர்ந்தான்?

அறிவு நிலை யாது?

அது எதனால் விருத்தி அடைகிறது?

அதன் வளர்ச்சியால் வருவது என்ன?

இந்த வினாக்களுக்கு உரிய விடைகள் இந்த அதிகாரத்தில் வந்திருக்கின்றன. சிந்தனை செய்து கொள்ளவேண்டும்.

# இரண்டாவது அதிகாரம்

## நூல்.

பேச்சு வழக்கால் மனிதன் மாட்சிமை அடைந்து வருகிறான். வாய்பேசும் வாய்ப்பு ஒன்றினாலேதான் மனித சமுதாயம் அதிசய நிலையில் உயர்ந்திருக்கிறது. விலங்கு முதலிய பிராணிகள் பேசா. மனிதன் ஒருவனே பேசவுரியவனாய்ப் பெருகி வந்துள்ளான். உள்ளத்தில் தோன்றிய தன் எண்ணங்களை வெளியே தெளிவாக மனிதன் உணர்த்துகின்ற ஒலிகளே மொழிகள் என விளங்கி நிற்கின்றன. மொழிகள் வழங்கவில்லையானால் யாவரும் ஈன ஊமைகளாய் இழிந்து கான விலங்குகளாய்க் கழிந்து நிற்பர். மிருகங்களைவிட மேலான மேன்மைகளை மனித இனம் மருவி இருத்தற்குக் காரணம் மொழிகளே என்பது விழி தெரிய வந்தது. வாய் மூட வையம் மூடும் என்னும் பழமொழியால் பேச்சு வழக்கின் காட்சிகளையும், மாட்சிகளையும் நேரே காணலாகும்.

உயிர் வாழ்க்கையின் ஒளி விளக்குகளாய் மொழி வழக்குகள் எங்கும் நன்கு அமைந்திருக்கின்றன. தன் கருத்தைப் பிறர்க்கு உணர்த்தவும், பிறர் கருத்தைத் தான் உணர்ந்து கொள்ளவும் மொழிகள் எவ்வழியும் துணையாய் இருத்தலால் மனிதவாழ்வுக்கு அவை ஒளி விழிகளாய்எழில் செய்துள்ளன. வாய்மொழி வழங்கி வருதலால் வையம் வழி வழியே இயங்கி வருகிறது. உலகம் உயர்ந்த நிலையில் இயங்கி வருவது எதனால் என்பதை இதனால் அறிந்து கொள்ளலாம். உரைகள் இயக்க உலகம் இயங்குகிறது.

தான் எண்ணிய எண்ணங்களை முதலில் மனிதன் மொழிகளால் விளக்கி வந்தான். பின்பு எழுத்துக்களால் உணர்த்த நேர்ந்தான். பேச்சு வழக்கு எதிரே நின்று கேட்பவர்க்கு மாத்திரம் பயன்பட்டு நின்றது; எழுத்து வழக்கு நேரே கேளாதவர்க்கும் பிற்காலத்தவர்க்கும் பயன் விளைத்துவந்தது. அவ்வரவுகள் அதிசய விளைவுகளாய் மதிநலங்கள் சுரந்து விதிமுறைகள் நிறைந்து மேலான நிலைகளில் மேவி வரலாயின. அத்துறைகள் அறிவின் நிறைவுகளாய் நின்றன.

உயர்ந்த பெரியோர்களுடைய எண்ணங்கள் எழுத்து வடிவங்களில் அமைந்திருப்பதையே நூல்கள் என்று நாம் உவந்து புகழ்ந்து உணர்ந்து வருகிறோம். ஒருநாட்டு மக்கள் வாய்மொழியாய்ப் பேசி வருவது அவர்க்குத் தாய்மொழியாய் அமைந்திருக்கிறது. உரியமொழி இனிய வழியாயது.

தேசங்கள் தோறும் இவ்வாறு வேறு வேறு வகையில் பாஷைகள் பரந்து விரிந்துள்ளன. தமக்குச் சொந்த மொழியான அந்த மொழியையே எந்த நாட்டவரும் முந்தவைத்து முதன்மையா மதித்து எங்கும் நன்குபோற்றிவருகின்றனர்.

ஒரு நாட்டு மொழி அதில் தோன்றியுள்ள நூல்களின் சால்புகளுக்குத் தக்கபடி மேன்மை பெற்று நிற்கிறது. இலை, தளிர், தழை, குழை, அரும்பு, மலர், பூ, பிஞ்சு, காய் கனிமுதலியனமரத்தில்கிளைத்துத்தழைத்துச்செழித்திருத்தல்போல் மொழியில் நூல்கள் விளைந்திருக்கின்றன. நூல்கள் சால்பாக இல்லையானல் அம்மொழி பட்டமரம் போல் பாழ்பட்டு நிற்கும். மொழிகளுக்கு மேன்மையெல்லாம் விழுமிய நூல்களே ஆதலால் அவற்றின் அருமை பெருமைகளை உரிமையோடு ஓர்ந்து நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

### பெயரின் காரணம்.

உலகில் தோன்றியுள்ள பொருள்களுக்கெல்லாம் பெயர்கள் தோன்றியுள்ளன. எங்கே உருவம் தெரிகின்றதோ அங்கே அதற்குப் பெயரும் மருவி நிற்கின்றது. பேர்களாலேதான் யாவும் பேர்த்துச் செல்லப் படுகின்றன. உருவமும் நாமமும் ஒருவா நிலையில் ஒருமுகமாய் மருவியுள்ளமையால் உலகம் முழுவதும் இந்த இருவகையில் அடங்கியுளது என மேலோர் துணிந்திருக்கின்றனர். நாம ரூபங்கள் என வடமொழியாளர் இவற்றைக் குறித்து வருகின்றனர். பெயர்கள் இடுகுறி காரணம் என இரண்டு பிரிவாயிசைந்து வந்துள்ளன. குறிப்பும் எதுவும் கூர்ந்தநோக்கால் நேர்ந்தன.

நூல் என்பது காரணப்பெயர். நூற்றலால் விளைந்தது என வினைக்குறிப்பால் வந்துள்ளது. பஞ்சிலிருந்து உண்டாகின்ற மெல்லிய இழையை நூல் என்று சொல்லுகிறோம். உலக நிலையிலுள்ள இந்த நூலை நூற்றற்கு ஒரு பெண்ணும் பஞ்சும் இராட்டினமும் கதிர் முதலியனவும் வேண்டும்; அதுபோல் கலை நிலையிலுள்ள கல்வி நூலை நூற்பதற்கு ஒரு கவிஞனும், சொல்லும், அறிவு முதலியனவும் வேண்டும். அந்த உபகரணங்கள் உரிமையோடு ஈண்டு உணர வந்தன.

பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவாய் ஆகக் கதிரே மதியாக
மையிலா நூல்முடியு மாறு. (1)

உரத்தின் வளம்பெருக்கி உள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டம் தீர்க்குநூல் அஃதேபோல் மாந்தர்
மனக்கோட்டம் தீர்க்குநூல் மாண்பு. (2)

உரம்—உறுதியான அறிவு. (நன்னூல்)

நூலின் விளைவையும் அதன் புபனையும் இவை நயமாக விளக்கியுள்ளன. கலையறிவாகிய கதிரிலிருந்து விளைந்து வந்துள்ளமையால் கல்வி நூலின் நிலைமையும் தலைமையும் நினைந்து கொள்ளலாம். உருவகவுரை கருதி உணர வுரியது.

மனத்தில் உள்ள கசடுகளை நீக்கி மனிதனை மேன்மைப் படுத்துவதே நூல் என்றதனால் அதன் மாட்சியும் ஆட்சியும் தெரிய வந்தன. பஞ்சு நூல் வெண் கலையாய் உடலை அலங்கரித்து மானத்தைக் காத்தருளுகிறது; நெஞ்சு நூல் எண் கலையாய் உயிரை அலங்கரித்து உயர்நலன்கள் பலவும் அருளுகின்றது. இருவகை நூல்களும் ஒரு தொகையாய் வந்து அவற்றின் உரிமை நிலைமைகளை ஈண்டு உணர்த்தி நின்றன.

உள்ளத்தைப் பண்படுத்தி உயர்ந்த உறுதி நலங்களை அருளி வருதலால் கல்விநூல் உயிர்க்கு உறுதித் துணையாய் உரிமை சுரந்துளது. அதன் உதவியால் அறிவு பெருகுகிறது.

நூல் என்பது என்ன? அதன் சால்பு யாது? அதனால் வரும் பயன்கள் யாவை? அதனை ஆக்கியருள்பவர் எத்தகைய நிலையினர்? என்பதை இங்கே அறிய நேர்ந்துள்ளோம்.

மேலோர்களுடைய எண்ணங்களே நூல்களாய் விளைந்து வந்துள்ளன. உயர்ந்த பண்பாடுகள் அமைந்த சிறந்த மேதைகளிடமிருந்தே மதிநலங்கள் சுரந்து உலகம் நலமுற நூல்கள் வெளி வந்திருக்கின்றன. நல்ல அறிவிலிருந்து ஊறி வந்துள்ளமையால் உயிர்களுக்கு உறுதி நலங்களை அருளி நூல்கள் உவகை புரிந்து வருகின்றன. பயிர்களுக்கு வான மழை போல் உயிர்களுக்கு ஞான நூல்கள் நலம்பல சுரந்து அருளுகின்றன. உணர்வின் சுவைகளாய் உவகை விளைத்து வருதலால் அவை உயர் போகங்களாய் நின்றன. அவற்றின் போதனைகள் புனிதமாய் இனிமை நிறைந்து மிளிர்கின்றன.

நூல்களை எல்லாரும் செய்துவிட முடியாது. தலைமையான புலமையோடு திருவருளும்தோய்ந்துள்ளவரே சிறந்த நூல்களைச் செய்ய முடியும். ஒருவன் சொல்வதை உலகம் முழுவதும் உவந்து கேட்பது என்றால் அது எவ்வளவுபெரிய மகிமையுடையது! எத்துணை மேதகவமைந்தது! அரிய தவ நீர்மை யுடையவரே இனிய கவி நீர்மையுடையவராய்க் கதித்து வந்து விதித்து நின்று புவிக்கு நன்மைசெய்கின்றார்.

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்" (தொல்காப்பியம்)

தலைமையான உயர்ந்த நூலைச் செய்ய உரியவர் இன்னார் என ஆசிரியர் தொல்காப்பியனார் இன்னவாறு குறித்திருக்கிறார். தெளிந்த மெய்யறிவும் தெய்வத் திருவருளும் எய்தியுள்ளவர் செய்தருளிய நூலே உய்தி தருவதாய் ஒளி புரிந்துள்ளது. புனித மதியிலிருந்து விளைந்து வந்துள்ள அறிவு நலங்கள் மனித சமுதாயத்துக்கு இனிய அமுதங்களாய் யாண்டும் பெருகி எவ்வழியும் இன்பம் புரிந்தருளுகின்றன.

எல்லாம் அறியவல்ல இறைவனுக்கு வாலறிவன் என்று பெயர். அந்த வாலறிவனது அருள் வரவு நூலின்சிருட்டிக்கு மூல முதலாயுள்ளது. வாலறிவன் ஒளி தோய்ந்து வரலால் நூலறிவின் சீலமும் சிறப்பும் நேரே நன்கு அறியலாகும்.

தெய்வ அருள் பெற்ற உயர்ந்த கவிஞர் செய்த நூல் மாந்தரது அறியாமையை நீக்கி உறுதி நலங்களை யுணர்த்தி யாண்டும் அவரை உயர்த்தி ஒளி செய்தருளுகிறது. ஆகவே அது ஒரு வான ஒளிபோல் ஞான ஒளிவீசி என்றும் இனிது விளங்குகிறது. அதனால் உலகம் நலமா உயர்ந்து வருகிறது.

உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள
தள்ளற் கரியஇருள் தள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு. (குலபதிநாயனார்)

கலைநிரம்பிக் காண்டற்கு இனிதாகிக் கண்ணின்
நிலைநிரம்பு நீர்மைத் தெனினும்—தொலைவிலா
வானூர் மதியம் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூல் நபத்தின் பயன். (நச்சுமனார்)

திருவள்ளுவர் அருளியுள்ள திருக்குறள் என்னும் நூலுக்குச் சூரியனையும், சந்திரனையும் இங்ஙனம் ஒப்புக்காட்டியுள்ளார். உவமை நிலைகளைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நயங்களை ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

அஞ்ஞான இருளை நீக்கி உள்ளங்களை விரியச் செய்து உணர்வு நலங்களை அருளிக் கலைகள் பல நிரம்பி இனிய நீர்மையோடு எவ்வழியும் இன்பங்களை ஊட்டி வருதலால் கதிரும், மதியும் என வள்ளுவர் நூல் அதிசய நிலையில் ஒளி செய்துள்ளது. பகல் ஒளியும் இரவொளியும் உலக இருள்களை நீக்கி ஒளி புரிகின்றன; தேவர் மொழி உயிர்களின் மருள்களை நீக்கி உயர்நலங்களை உரிமையோடு அருளுகிறது.

நூல் என்றால் என்ன? அது எப்படி இருக்கவேண்டும்? அதனால் மக்களுக்கு என்ன பயன்? என்பதை இவை நுட்பமா உணர்த்தி நூலின் பான்மையை நன்கு விளக்கியுள்ளன.

உயர்ந்த மகான்களுடைய சிறந்த எண்ணங்களே மேலான நூல்களாய் வெளிவந்துள்ளன; ஆகவே அவை சீவகோடிகளுக்குத் தேவ அமுதங்களாய் மேவியிருக்கின்றன. அறிவின் சுவைகள் அதிசய இன்பங்களாய் வந்தன.

இதிகாசங்கள், புராணங்கள், காவியங்கள், தருமநீதிகள் முதலிய பலவகை நிலைகளில் கலை பரவியிருக்கிறது. எவ்வழியும் அறிவின் சுவைகள் பெருகியிருத்தலால் யாண்டும் அது தலைமையாய் நிலவி வருகின்றது. கருதிப் பயிலுந்தோறும் அரிய பல உறுதி நலங்களை அருளி வருதலால் மனித சமுதாயத்துக்கு அவை தெய்வ நிதிகளாய் எய்தியுள்ளன. அவற்றால் உயிர்கள் உய்தி பெற்று வருகின்றன.

சிறந்த அரசர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும், குணநீர்மைகளும், கொடை நலங்களும், வினையாண்மைகளும், வீரப்பிரதாபங்களும் கவியுருவங்களில் அமைந்த பொழுது அவை காவியங்களாய்ச் சீவியங்களை விளக்கி வந்தன.

இராமனது அற்புத சரிதம் இராமாயணம் ஆயது.
பாண்டவர் வரலாறு பாரதம் ஆய் விரிந்தது.
கண்ணன் கதை பாகவதமாய் விளைந்தது.
முருகப்பெருமான் அருளாடல் காந்தமாய்க் கனிந்தது.
சீவகன் சீவியம் சிந்தாமணி என எழுந்தது.
திவிட்டன் சரித்திரம் சூளாமணியாய்த் தோன்றியது.
அரிய அன்பர்கள் சீவியம் பெரிய புராணமாய் மேவியது.
கோவலன் கதை சிலப்பதிகாரமாய்ப் பிறந்தது.
மணிமேகலை துறவு மணிமேகலையாய் மருவியது.
உதயணன் சரிதம் பெருங்கதையாய் உதயமாயது.
குண்டலகேசி கதை குண்டலகேசி என வந்தது.
அரிய தரும நீதிகள் யாவும் திருக்குறள் எனத்திகழ்ந்தன.
காதல் வீரங்கள் எல்லாம் அகம் புறம் என வந்தன.
தெய்வ நீர்மைகள் பலவும் திருமுறைகளாய் விளைந்தன.

இன்னவாறே தமிழ் மொழியில் அரிய பல அறிவுநூல்கள் இனிது விளைந்துள்ளன. உலக போகங்களை மறந்து உணர்வின்பங்களையே எவ்வழியும் நுகர்ந்து மகிழும்படி

அலகிலின்பங்களாய்க் கலைகள் பெருகி யிருக்கின்றன. நூல்களின் உருவங்களில் மருவியுள்ள அவற்றின் நிலைகள் பல வகைகளில் உயர்ந்துள்ளன. சில நினைந்து சிந்திக்க வந்தன.

தொல்காப்பியர் தரு தொல்காப்பியமும்
பல்காப்பியர் புரி பல்காப்பியங்களும்
திருவள்ளுவரின் அருள்மொழி அமுதமும்
கம்பர் கவியின் செம்பொருள் இன்பமும்
சிந்தா மணியின் நந்தா அணியும்
சிலப்பதிகாரத்தின் செவ்விய சுவையும்
மணிமேகலையின் மதியுயர் கலையும்
வளையா பதிவரு இளையா நலமும்
குண்டல கேசியின் மண்டருள் மதியும்
சூளா மணியின் தோலா இனிமையும்
மேருமந் தரத்தின் மேலாம் மதியும்
கல்லாடத்தின் எல்லா எழிலும்
அகம்புறம் அமைந்த சுகம்புரி நிலையும்
பத்துப் பாட்டின் வித்தக விளைவும்
பெருங்கதை பெருகிய அருஞ்சுதை அமைதியும்
கந்த புராணத்தின் அந்தமில் இன்பமும்
பாரதம் படிந்த நீரத நிறையும்
பெரிய புராணத்தின் அரியபண் பாடும்
திருவிளை யாடலின் அருள்விளை யாடலும்
திருவாசகம் தரு தெய்வீக நிலையும்
திருவாய் மொழியின் திவ்விய ஒளியும்
திருப்புகழ் தெளித்த விழுப்புகழ் விரிவும்
தாயு மானவரின் தூயபே ரின்பமும்
அருட்பா சுரந்த தெருட்பா வமுதும்
இன்னோ ரன்ன பன்னரும் பனுவல்கள்

ஆன்ம உருக்கமும் அருளின் பெருக்கமும்
மேன்மையும் பான்மையும் மேதக வமைந்து
தெய்வமணம் கமழ்ந்து தேசு மிளிர்ந்து
முந்தமிழ் தென்னச் செந்தமிழ் எழுந்துள
அந்தமில் இன்புயர் அரிய நூல்கள்
எந்த மொழியும் எய்தா நிலையில்
நந்தம் மொழியில் நாமினி தடைந்து
சந்ததம் பெருமை சார்ந்து தழைத்து
வந்தமர்ந் துள்ளோம் வரவுநிலை யுறவே.

இந்தவாறு அரிபல கலை நூல்களை நாம் உரிமையோடு பெற்றிருக்கிறோம். இருந்தும் தகுந்தபடி உணர்ந்து பிரிய முடன் பயின்று பேரின்பங்களை நுகராமல் அபலே மபலாப் நம்மவர் அவலமுற்று உழலுகின்றனர். தாய்ப்பால் இழந்த குழந்தைபோல் தாய்மொழி நூல்களை இழந்து நோய்ப்பா லுழந்துநொந்து தவிப்பது சிந்தையை வருத்தி வருகின்றது.

அறிவுநூல் மனித வாழ்வைப் புனிதப்படுத்தி இனிமையாக நடத்தி வருகிறது. அரசனது ஆணைக்குக் கீழ்ப்படிந்து குடிகள் ஒழுகி வருதல்போல நூலினது விதிகளை நோக்கிச் சால்புடன் நடந்து வருபவர் மேலோராய் விளங்கி வருகின்றனர். மதி நூல் ஒழுக்கம் மகிமைகளை விளைத்தருளுகிறது.

மானிடர் உள்ளத்தில் ஒரு ஞானச் சட்டமாய் நின்று அவரது வாழ்க்கையை இனிது நடத்தி இதம் புரிந்து வருதலால் நூலுக்கு அதிகாரம் என்று ஒரு பெயரும் வந்தது.

“அதிகாரம் பிடகம் ஆரிடம் தந்திரம்
பனுவல் ஆகமம் சூத்திரம்நூலே” (பிங்கலந்தை)

நூலுக்கு இவ்வாறு ஏழு பெயர்கள் பிங்கல முனிவர் காலத்தில் வழங்கி வந்துள்ளன. மனிதன் நெறிமுறையோடு

கூடி வாழுதற்கு உரிய அறிவுரைகளை நூல்கள் அருளிவருத லால் அவை சீவிய ஒளிகளாய் மேவி மிளிர்கின்றன. வேத வழக்கு, நீதி வழக்கு, நூல் வழக்கு, உலக வழக்கு, ஊர் வழக்கு என வருவன உயிர்வாழ்க்கையின் வழக்க வகை களை வளமா விளக்கிப் பழக்கநிலைகளைத் துலக்கிநிற்கின்றன.

விதிமுறைகளை அறிந்து நெறியே ஒழுகிவரும் அளவு தான் மனித வாழ்வு பெருமை பெறுகின்றது. வரம்பு ஒழுங்கு நியமம் நியதி கட்டுப்பாடு பண்பாடு என்பன எல் லாம் வாழ்வின் சீர்மை நீர்மைகளைக் குறித்து வந்தன. மனி தன் அறிவு நிலையில் உயர அரிய பல உரிமைகள் பெருகி வரலாயின. நெறி முறைகள் நேரே சீராய் மருவி நின்றன.

வரம்பின்றி மனம் போனபடி திரியின் அது மிருகவாழ்க் கையாய் இழிவுறுகின்றது. வரம்புள்ளது உயர்ந்து வருகி றது. நலங்காணுதவன் விலங்காய் விலகிவிளிந்துபோகிறுன்.

நன்மை தீமைகளை நாடியறிந்து நல்ல நெறிகளில் முறையே ஒழுகி வருபவர் நல்லவர் என வந்தார். நெறி தவ றித் தீய வழிகளில் திரிபவர் தீயவர் என நேர்ந்தார். தீமை துன்பம் புரிகிறது; நன்மை இன்பம் தருகிறது. சீவர்கள் யாவரும் இன்பமே விரும்பும் இயல்பினர் ஆதலால் அவர் யாண்டும் நல்ல வழிகளிலேயே ஒழுகி வரவேண்டிய உரி மையிலுள்ளனர். அந்த நல்ல ஒழுக்கம் நூலறிவால் நன்கு அமைந்து வருகிறது. அவ்வழி ஒழுகின் செவ்வியனுகிறுன்.

"நூல்முறை தெரிந்து சீலத்து ஒழுகு"

என உலக மக்களை நோக்கி ஔவையார் இவ்வாறு செவ்வையாக அருளியுள்ளார். பெரியோர்களுடைய அனு பவ அறிவுகளை நூல்கள் உதவி வருதலால் அவை இனிய

உயிர்த்துணைகளாய் மருவி யுள்ளன. மதிநலங்களை அருளி வருவன அதிசய நிலையில் துதிசெய்ய நின்றன. நூலறிவுக்கும் சீலத்துக்கும் உள்ள உறவுரிமைகள் சாலவும் கருதி யுணர வுரியன. பழகிய பயிற்சி விழுமிய உயர்ச்சி யாயது.

புத்தகம், ஏடு, முறை என்னும் பெயர்கள் நூலுக்கு உரிய நாமங்களாய் வந்திருக்கின்றன. சேர்ந்துள்ள பெயர்களுக்குக் காரணங்கள் ஓர்ந்து உணர நேர்ந்தன. உருவங்களும் பெயர்களும் யூக விவேகங்களாய் மருவி மிளிர்கின்றன. நெறியானஒழுங்குகள் அமைந்தது முறைஎனவந்தது.

புத்தியை அகத்துள் வைத்திருப்பது புத்தகம் எனவந்தது. அறிவுநலங்கள் உள்ளே பெருகியுள்ளமையால் புத்தகம் என்னும் பேரால் நூல் வித்தகமாய் விளங்கியுள்ளது. அகம் ஆகிய மனம் புதிய ஒளி பெற்று உயர்நிலையடைய உயிர் நிலையமா யிருப்பது புத்தகம் என நின்றது. எனவே அதன் தத்துவநிலையைத் தகவாய்உய்த்து உணர்ந்து கொள்ளலாம்.

"புத்தகத் துள்ளுறை மாதே
பூவில் அமர்ந்தருள் தாயே"

எனச் சரசுவதி தேவியை இவ்வாறு துதித்துள்ளனர்.

கலா தெய்வம் இனிது அமர்ந்திருக்கிற புனித நிலையமாய்ப் புத்தகங்கள் பொலிந்திருக்கின்றன. ஆகவே அவற்றின் தன்மையும் தனி மகிமையும் நன்கு அறிய வந்தன.

## புத்தகம்

மனித இனம் மாண்புறும்படியான அறிவு நலங்களை உரிமையாக வைத்திருத்தலால் புத்தகம் அரியகலையின் கருவூலமாய் நிலவியுள்ளது. செல்வம் நிறைந்துள்ள நிதியறைகளை உலகம் விழைந்து வியந்து போற்றுகின்றது; கல்வி

நிறைந்துள்ள நிதியறைகளான புத்தகங்களை அறிவுலகம் உவந்து புகழ்ந்து போற்றி வருகின்றது. பொருள்கள் உலக போகங் களுக்குச் சாதனங்களாய் நின்று அனுபவிக்குந் தோறும் கழிந்து தேய்ந்து ஒழிந்து போகின்றன. அறிவு நூல்கள் இனிய ஆன்ம போதங்களாய் நின்று பேரின்ப நலங்களைவிளைத்து அனுபவிக்குந்தோறும் பொங்கி வளர்ந்து என்றும் குன்றாமல் யாண்டும் தேயாமல் எவ்வழியும் திவ்விய போகங்களாய்ச் செழித்து ஓங்கி வருகின்றன. உடல் அளவில் நின்று ஒழிந்து போகின்ற ஊனப்பொருளினும் உயிரோடு தோய்ந்து என்றும் ஒளிபுரிந்தருளுகின்ற ஞானச் செல்வம் எவ்வளவு மகிமையுடையது! எத்துணை நன்மையது! எத்தனை தத்துவங்கள் எய்தியது! உய்த்துணர வேண்டும்.

உள்ள மருள்களை ஒளித்து உணர்வுக்கு ஒளி அருளி உயிருக்கு இன்பம் புரிந்து வருவது உயர்ந்த நூல் என வந்தது. இனிய அறிவு நலங்கள் அமைந்த விழுமிய அமுத கலசங்களாகவே அரியநூல்கள் நெறியே மருவி மிளிர்கின்றன.

"நூல் பல கல்" என்றதனால் கல்விக்கும் நூலுக்கும் உள்ள உறவுரிமையை உணர்ந்து கொள்ளலாம். படிப்பு, கல்வி என்னும் மொழிகள் வினைக்குறிப்புகளாய் வெளிவந்துள்ளன. எதைப் படிப்பது? எதனைக் கற்பது? என்னும் வினாக்களுக்கு அவை விடைகள் தந்துகொண்டிருக்கின்றன. உள்ளே யிருக்கும் அறிவு புறச்சார்பால் ஓங்கி வருகிறது.

கண்ணால் பார்த்துப் படிப்பது கல்வி.

காதால் கேட்டு அறிவது கேள்வி.

கல்வி கேள்விகளாகிய இந்த இரண்டும் மனிதனுக்கு அறிவு நலங்களை அருளி வருகின்றன. பின்னதினும் முன்

னது தலைமையுடையது; நேரே முதலில் பயில வுரியது; அந்தப் பயிற்சியின் அளவு அறிவின் உணர்ச்சிகள் உளவாகின்றன. படிந்து பயின்று பழகி வருவது பயிற்சி என வந்தது.

"நூல்அளவே ஆகுமாம் நுண் அறிவு" என்றார் ஔவையார்.

"இலங்குநூல் கல்லாதான் விலங்கு" என்றார் தேவர்.

கல்வி மனிதனைத் தெய்வமா உயர்த்தி யருளுகின்றது; கல்லாமை அவனை மிருகமாத் தாழ்த்தி விடுகின்றது. மடையன், மூடன் என்னும் இழிபெயர்கள் கல்லாதவனை உரிமையாத் தழுவிக் கொள்கின்றன. மூடம் மடமை என்னும் மொழிகள் அறிவு விளக்கமின்றி மனிதனை மழுங்கச் செய்திருக்கும் இழி நிலைமையை நேரே வெளியாக்கி யுள்ளன.

மடமை இருள் கல்வி விளக்கால் ஒழிந்து போகிறது.

"மடம்கொன்று அறிவு அகற்றும் கல்வி." (நீதிநெறி) என்றது கல்வியின் செயலும் இயலும் தெரிய வந்தது.

களையைக் களைந்து உழவன் பயிரை வளர்ப்பதுபோல் மடமையைக் களைந்து கல்வி அறிவை வளர்க்கிறது. கொல்லும் என்ற குறிப்பால் அந்த மடமையின் கொடுமையும் தீமையும் அறிய வந்தன. தீயது தூயதால் தொலைகின்றது.

நன்மை தீமைகளை நாடி அறிய ஒட்டாமல் மனிதனைக் குருடுபடுத்தி நெடிய இழிவில் ஆழ்த்தியிருத்தலால் மடமை கொடிய இருள் நெடிய மருள் எனக் கடிய நின்றது.

"There is no darkness but ignorance" (Shakespeare)

"மூடமே மிடை இருள்" என ஆங்கிலக் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் இங்ஙனம் கூறியிருக்கிறார். அல்லல்களையும் அவமானங்களையும் தருகின்ற பொல்லாத மடமையை நீக்

கிக் கல்வி மனிதனை நல்ல நிலையில் உயர்த்தி யருளுகிறது. அந்தக் கல்விக்கு உரிய சாதனங்களாய் நூல்கள் அமைந்திருக்கின்றன. ஆகவே நூல்களை மேலோர் சாலவும் போற்றிவரலாயினர். அறிவின் கருவூலமாக அவை மதிப்பும் மாண்பும் பெற்றுள்ளன. மதிநலம் உடையது அதிநலம் ஆயது.

சிறந்த மதிமான், உயர்ந்த குலமகன் என்பதை அவன் மனையில் நிறைந்திருக்கும் நூல்களைக் கொண்டே உலகம் அறிந்து வருகிறது. புதிய ஒரு வீடு கட்டும்பொழுது அதில் புத்தக நிலையம் ஒன்றை அமைத்து வைப்பது உயர்ந்த நாகரிகத்தின் அறிகுறியாயுள்ளது. அந்த அறிவுநிலையம் அங்கே இல்லையானால் அவ்வீடு வறிய மூடக் குடியாய்ப் பீடையடைந்து பிழைபடுகிறது. பயன் இழந்தது பாடழிந்தது.

கற்ற மகன்போல் நூல் பெற்ற மனையும் நேரே பெருமைபெற்றுள்ளது. நூல் நிலையம் இல்லாத வீடு சால்பு அடையாது. மாடுகள் படியா; ஆகவே அவை நூல்களைச் சேர்த்து வைபா. மனிதன் படிக்கின்றான்; அறிவின் சுவையை நுகர்ந்து மகிழ்கின்றான். அவன் படித்தவன்; கலையுணர்ச்சி யுடையவன் என்பதை அவனது வீட்டிலுள்ள நூல்கள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன. புத்தகம் உடையதே புத்தகம் என்றார் ஒரு வித்தகர். பல மேதைகளுடைய அறிவு நலங்கள் மருவியுள்ளமையால் புத்தகங்கள் பெரிய தெய்வ நிதிகளாய்ச் சிறந்து தேசு மிகுந்து திகழ்கின்றன.

"A library is infinite riches in a little room."

"சிறிய அறையிலுள்ள ஒரு புத்தகப் பேழை எல்லையில்லாத பெரிய செல்வம்" என்னும் இது இங்கே அறியவுரியது. இந்த அரிய நிதி இல்லையேல் அது வறியதாகிறது.

புத்தகம் உள்ளதே புத்தகம்; இல்லையேல்
பித்தகம் ஆகும் பிறழ்ந்து.

என்றது நூல் இழந்த மனையின் நிலை தெரிய வந்தது. நல்ல புத்தகங்களை வைத்திருக்கும் வீடு புதிய மகிமையுடையதாய்ப் பொலிந்து விளங்குகிறது. மதிநலம் வாய்ந்த அந்த விளக்கத்தால் அது புத்தகம் எனப் புகழ்மிகப் பெற்றது. மேதா விலாசங்களை மேவி யிருப்பது மேலான மகிமைகளை மேவியுளது. மேன்மைகள் பான்மைகளால் ஆகின்றன.

அரிய புத்தகங்களிடையே நாம் இருப்பது திருவள்ளுவர், கம்பர் முதலிய பெரிய மேதைகளோடு உடனமர்ந்து உரிமையோடு மருவி மகிழ்வதாம். காலம் தேசம் முதலிய தடைகள் யாவும் கடந்து மேலோரோடு நாம் மேவி மகிழ்வது நூல்களாலேயாம். அவற்றோடு பழகி வரும் பழக்கம் அரிபல இன்பங்களை விளைத்து அதிசயங்களை அருளுகிறது.

நூல்கள் சால்புடைய ஒரு புனித உலகம்; அதில் புகுந்தபோது மனிதன் புனிதனுப் உயர்ந்து அரிய இன்ப நலங்களை அடைந்து அனுபவிக்கிறான். ஊன நிலைகள் யாவும் நீங்கி ஞான நலங்கள் சுரந்து நலம் பல நிறைந்துள்ளமையால் நூல்கள் வானுலக போகமாய் வயங்கி வருகின்றன.

"Books are a substantial world, both pure and good."
[wordsworth.]

"தூய்மையும் நன்மையும் உடைய உண்மை உலகமே புத்தகங்கள்" என வேர்ட்ஸ்வோர்த் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு நூல்களைக் குறித்து நயமாக்கூறியிருக்கிறார்.

மேல்நாட்டு மக்கள் புத்தகங்களைப் போற்றி வருவது வித்தகக் காட்சியாய் விளங்கிவருகிறது. பலநாட்டு அறிஞர்

களுடைய கலை ஞானங்களையெல்லாம் நூல்கள் வாயிலாய் நுகர்ந்து வருதலால் அவர் எங்கும் உயர்ந்து வருகின்றனர்.

கலை நலங்கனிந்த பெரிய மேதைகளுடைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் நூல்களாய் வெளிவந்துள்ளன ஆதலால் அவற்றைக் கருதி உணருந்தோறும் அறிவு நலங்கள் சுரந்து உறுதிநலங்கள் பெருகி வருகின்றன. சொல்லிலும் பொருளிலும் மருவியுள்ள சுவைகளை நுகர்ந்து உவகைகள் கூர்ந்து உயர்ந்த நிலைகளை ஓர்ந்து தேர்ந்து வருகின்றோம்.

உண்ணும் உணவில் ஆறுவகையான சுவைகளே இருக்கின்றன. எண்ணும் உணர்வில் ஒன்பது சுவைகள் உள்ளன. அந்த நவரசங்களும் உயர் சுவைகளாய் உவகைகளை ஊட்டி வருகின்றன- அந்த ஊட்டம் ஞான ஈட்டம் ஆகிறது.

தேக போகங்கள் பொறி வெறிகளாய் விரிந்து மோக மயக்கங்களைச் செய்கின்றன. அறிவின் போகங்கள் புனிதமான ஆன்ம இன்பங்களாய் மேன்மை சுரந்துள்ளன. ஞான போதனைகளை நல்கி வருதலால் உயர்ந்த நூல்கள் சிறந்த சிவ அமுதங்களாய்ச் சீரோடு மேவி மிளிர்கின்றன.

"புத்தகம் படிகமாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகம் தரித்த செங்கை விமலை" (கம்பர்)

கலா தெய்வத்தை இங்ஙனம் கம்பர் துதித்திருக்கின்றார்.

கல்வியின் அதிதேவதையான சரசுவதி தேவி தனது அழகிய கையில் உரிமையாக வைத்திருப்பது புத்தகம் என்றமையால் அதன் வித்தக நிலையை உய்த்துணர்ந்து கொள்ளலாம். ஞான நிலையமாய் அது மோனம் கனிந்துள்ளது; அவ்வுண்மையை உணர்வுடையார் உவந்து நுகர்ந்து வருகின்றார். அரிய பெரிய மேதைகளுடைய உயிருணர்ச்சிகள்

உறைந்துள்ள இன்பச் சுரங்கங்கள் என நூல்களை ஒருவன் உணர்ந்து கொண்டால் அவன் மேலான நிலைமை அடைந்து கொண்டான். இனிய நூல்கள் அதிசய இன்ப போகங் களாய்ச் சுவை சுரந்திருக்கின்றன. உள்ளத்தை உருக்கி உணர்வைப் பெருக்கி உயர்ந்த ஆனந்தங்களை ஊட்டி வருத லால் அவற்றை உண்டு வருபவர் உலக போகங்களைக் கடந்து உயர்ந்த பேரின்ப நிலைகளைக் கண்டு வருகின்றனர்.

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து என்
ஊன்கலந்துள் உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே. (1)

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில்
ஒருமொழியே என்னையும் என்னுடையனையும் ஒன்றுவித்துத்
தருமொழியாம் என்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பி அயல் கூடுவதேன் கூறுதியே! (2)

மாணிக்கவாசகர் அருளியுள்ள திருவாசகம் என்னும் நூலை இராமலிங்க சுவாமிகள் ஓதி உணர்ந்து உருகி அனு பவித்துள்ள நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. மேலோரது நூலின் நுகர்ச்சியில் எவ்வளவு இன்பங்கள் விளைந்து வருகின்றன என்பதை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளு கிறோம். அரிய பெரிய ஆன்ம ஆனந்தம் தெரிய வந்தது.

பரமனை எண்ணி எண்ணிக் கண்ணீர் மல்கி உண்மை யான அன்பால் உருகி வந்த பாடல்கள் ஆதலால் அவற்றை உரிமையோடு படிக்கின்றவர்களுடைய உள்ளங்களை அவை உருக்கிவிடுகின்றன. உள்ளம் உருகிய அளவு உயிர் உயர்நிலை யை அடைகிறது. படிக்கின்றவரைப் பரவசமாக்கி வருகிற

நூல்கள் அவற்றை இயற்றினவரது பரிபக்குவ நிலைகளைத் தெளித்துக்காட்டுகின்றன. தெய்வீகமானதுஉய்திபுரிகிறது.

ஒரு மனிதன் உவந்து படிக்கும் நூலைக்கொண்டே அவன் உள்ள நிலையை உணர்ந்து கொள்ளலாம். தனது மன நிலைக்குத் தக்கபடியே மனிதன் இன நலனைத் தழுவிக்கொள்ளுகிறான். ஓதலும் உணர்தலும் உரைத்தலும் உள்ளத்தின் பயிற்சியை ஒட்டி வருகின்றன. நீர்மை அளவே சீர்மையும் சிறப்பும் சேர்ந்து தேசு மிகுந்து நிற்கின்றன.

உள்ளத்தைப் பண்படுத்தி உணர்வை உயர்த்தி ஒளி புரிகின்ற நல்ல நூல்கள் அரிய இனிய அமுதபோகங்களாய் மருவியுள்ளன. அறிவுடைய மனிதரது ஒவ்வொரு வீட்டிலும் அவை தனி உரிமையா யிருக்க வேண்டும். மேல் நாடு மேல்நாடாய் இருப்பது நூல்களாலேயாம். நல்ல நூல்கள் இல்லை ஆனால் அங்கே பொல்லாத மூடமே குடி கொண்டிருக்கும் ஆதலால் அந்த இட நிலையின் மட நிலைகளையும் மதி கேடுகளையும் எதிர் அறிந்து மதி தெளிந்து கொள்ளலாம்.

கல்லான் விலங்காய்க் கழிதல்போல் நல்லநூல்
இல்லாத வீடும் இழிவு. (அரும்பொருளமுதம்)

இந்த இழிவு நேராமல் தெளிவுகொண்டு வாழவேண்டும். சிறந்த மனிதனாய்ப் பிறந்திருந்தாலும் கல்லாது நின்றால் அவன் ஒரு பொல்லாத மிருகமாய் விடுகிறான்; அவனது உயர்ந்த உடம்பும் இழிந்து பாழாகின்றது. கல்லாத உடம்பு பாழாதல் போல் நூல் இல்லாத வீடும் பாழ்படுகின்றது. சிறந்த மேடைகளோடு உயர்ந்திருந்தாலும் தகுந்தநூல்களை அடைந்து கொள்ளவில்லையானால் அந்த வீடு ஒரு மூடமான பீடையேயாம். அறிவின்ஒளி இலையேல்அது அவல இருளாம்.

எல்லாருடைய இல்லங்களிலும் நல்ல நூல்கள் நிறைந்த பொழுதுதான் இந்த நாடு சிறந்த சீருடையதாய் உயர்ந்து விளங்கும். உணவும் உடையும் உடலுக்கு அவசிய தேவை; அதுபோல் உணர்வு நூல்கள் உயிருக்கு மிகவும்தேவையாம். நல்ல வாய்ப்புகள் அமைந்திருந்தும் பலர் கல்லாமல் வீணே காலத்தைக் கழித்து விடுகின்றனர். உல்லாச விநோதங்களி லும் பொல்லாத போகங்களிலும் மோகம் கொண்டு திரித லால் மூட இருள் அவரைக் கூடவே சூழ்ந்து கொள்ளுகின் றது. அவரது வாழ்வும் சூழ்வும் வசைபடிந்து மடிகின்றன. நாவின் சுவையில் நசைகூர்ந்து வருதலால் பாவின் சுவையில் பலன் காணாது போயினர்; போகவே அவரது போக்கும் நோக்கும் ஆக்கம் இழந்து அவலம் அடைய நேர்ந்தன.

செவியின் சுவைஉணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்? (குறள், 420)

அறிவு நூல்களின் சுவைகளை உணராமல் உணவின் சுவைகளையே அவாவி அலையும் மானிடர் இருந்தால் என்ன? செத்தால் என்ன? என்று வள்ளுவப் பெருந்தகை இப்படி வயிறு எரிந்து வைதிருக்கிறார். வயிற்றெரிச்சலோடுவந்திருக் கிற இந்த உரைக் குறிப்புகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். அருளாளர் வாய்மொழி பொருளாழமுடையது.

சிறந்த மனிதப் பிறவியை அடைந்திருந்தும் தகுந்த அறிவு நலங்களை அடைந்து கொள்ளாமல் வீணே இழிந்து போதலால் அவரதுஇருப்பு வெறுப்பாயது. தன் உயிர்க்கும் பயன் இன்றி, பிற உயிர்கட்கும் யாதும் உதவிபுரிய முடியா மல் மடையன் வறிதே வளர்ந்து திரிகிறான்; அவன் நிலை பயன்பாடில்லாத படு புலை ஆதலால் இங்ஙனம் பழிக்கப் பட்டான். பழிப்பு உரை விழிப்பை விளக்க எழுந்தது.

மாக்கள் என்னும் சொல் ஆடு மாடு முதலிய மிருகங்களைக் குறித்து வரும். உணர்வின் சுவையை உணராதவனை அந்த மொழியால் குறித்தது அவனது சொந்தமான நிந்தை நிலை தெரிய வந்தது. நூல் கல்லாதவன் விலங்கு என்று தேவர் முன்னம் குறித்தமையால் அந்தக் குறிப்பு இங்கே துலங்கி நின்றது. குறிப்பு மொழிகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

சிறந்த மேலோர்களுடைய எண்ணங்கள் நூல்களின் வண்ணங்களாய் வந்துள்ளன. அவற்றைக் கருதி உணர்ந்தவர் அறிவு நலங்களில் சிறந்து உயர்ந்து வருகின்றனர்; அங்ஙனம் உணராதவர் வறிதே இழிந்துகழிந்து போகின்றனர்.

"நீட்டு ஓலை வாசியான் காட்டு மரம்" என்றார் ஔவையார். கல்லாமல் நின்று மனிதன் பொல்லாத மரம் ஆகலாமா?

அறிவுடைமையால் மனிதன் பெருமை அடைகிறான்; அது குறைந்த அளவு அவன் சிறுமையுறுகின்றான். கல்வியும் கேள்வியும் அறிவின் சுவைகளை ஊட்டி மனிதனை மகிமைப்படுத்தி வருகின்றன. இளமையில் அடைய வுரியதை உரிமையோடு மருவிவரின் பெருமைகள் பெருகிவருகின்றன.

கண் பெற்றது கல்வி கற்கவே.
செவி யுற்றது கேள்வி கேட்கவே.

உரிமையான இந்தக் கல்வியும் கேள்வியும் இல்லையானால் அந்த மானிடன் சிறுமையாய் ஈனம் அடைகின்றான். ஊனம் உறாமல் ஞானம் உற்று உயர வேண்டும் என்னும் குறிப்பை உறுப்புக்கள் இங்கே நன்கு உணர்த்தி நின்றன.

கண்ணும் காதும் கலைகளாய் எண்ண வந்தன.

கலையின் சுவைகளைக் கருதி நுகராமல் வாயின் சுவையிலேயே ஒருவன் வளர்ந்து வந்தால் அவன் அந்த நாட்டுக்கு

ஒரு நோயே. மனித உருவில் பெருகி யுள்ள அந் நோய் உலகில் இல்லாமல் இருப்பதே நல்லது எனத் தேவர் சொல்லாமல் சொல்லியுள்ளதை ஊன்றி உணர்ந்து கொள்கிறோம்.

நாக்குச் சுவை உடலை வளர்க்கும்.
செவிச் சுவை உயிரை வளர்க்கும்.
அது ஊன உணவு.
இது ஞான உணவு.

உணர்வை ஒளிசெய்து உயிர்க்கு இன்பம் புரிந்து வருதலால் செவிச் சுவை திவ்விய மகிமை யுடையது; அதனை நுகர்ந்து வருபவர் உயர்ந்து திகழ்கின்றார். இழந்து நின்றவர் இழிந்து கழிந்து ஒழிகின்றார். இழிவும் கழிவும் அழிவாய் நின்றன.

மாட்டுக்குச் செவி இருந்தாலும் நூலின் சுவைகளைக் கேட்டு உவகை யுறுந்திறம் அதற்கு இல்லை. மனிதன் செவி நுகர்ச்சியில் உயர்ந்து வந்திருக்கிறான். வந்தும், அரிய சுவையை இழந்திருப்பது பெரிய இழவாம்; ஆகவே அவ் வாழ்வு சோகமா யிழிந்து படுகிறது. அறிவின் நீர்மை அளவே மேன்மையும் சீர்மையும் மேவி வருகின்றன.

பாட்டுக்கு உருகிப் பயனுணர்ந்து பண்பமைந்து
வீட்டுக்கு உரியராய் மேவாமல்---மாட்டுப்
பிறப்பா யிழிந்து பிழைப்பதினும் முந்தி
இறப்பாய் ஒழிதல் இனிது.

நூலறிவை இழந்தபொழுது மனிதன் சாலவும் இழிந்து படுகிறான். அவன் உயிரோடு நெடிது வளர்ந்து நின்றாலும் செத்தவனாகவே எண்ண நேர்கின்றான். கல்வி அறிவு பறி போனமையால் அல்லல்களும் இழிவுகளும் அவலமாய் அடைய நேர்ந்தன. அறிவைத் தெளிவாக்கி அரிய பல மேன்மைகளை அருளவல்ல கல்வியை ஒருவன் இழந்துவிடின்

5

கண் இழந்த குருடன்போல் பரிதாபநிலையில் அவன் வறிதே இழிந்து போகின்றான். அப் போக்கு புலையாய் நின்றது.

கல்வி நலம் தோய்ந்து மேலோர்களுடைய அறிவு நலங்கள் நூல்களாய் வந்துள்ளமையால் அவை மனித சமுதாயத்துக்குச் சால்பான துணைகளாம். தம்மோடு உரிமையாய்ப் பயில்கின்றவர்களுக்கு உள்ளத்தெளிவும் உணர்வு நலனும் உவகை வளமும் உறுதி நிலையும் உதவி வரலால் நூல்கள் புனிதமான இனிய துணைகளாய் மருவி யுள்ளன.

நல்ல நூல்களைப் படிக்கும்பொழுது உள்ளம் அதில் ஊடுருவிப் புகுந்து பொருள் நலங்களை உவந்து நுகர்கின்றது; நுகரவே அபலான மபல்கள் அகலுகின்றன; கவலைகள் ஒழிகின்றன. விளக்குப் புக இருள் மாய்ந்ததுபோல் கல்வி நூல் புக மருள் மாய்கிறது. மதிநலம் பெருகி விதி முறைகள் தெளிந்து அதிசய நலங்கள் மருவி வருகின்றன.

உள்ளக் கவலை ஒழியும் உயரின்ப
வெள்ளம் பெருகி விரியுமே---தெள்ளிய
நூல்ஒன்று கைஏந்தி நோக்கின் அதன்துணை
போல்ஒன் றிங் குண்டோ புகல்?

என்றதனுல்அதன் தகவும் தன்மையும் நன்கு அறியலாகும். நூல்நோக்கு மேலானநோக்குகளை விளைத்து அருளுகிறது.

அறிவின் சுவையாய் அமைந்திருத்தலால் நூலின் நுகர்வு ஆன்ம போகமாய் மேன்மை சுரந்துள்ளது. பால் தேன் முதலியன இனிய சுவை யுடையனவே ஆயினும் நூலின் சுவைபோல் அவை மேலான நிலையை விளைத்தருளா. நாவில் உண்டவுடனே அவை உருக்குலைந்து ஒழிந்துபோம்; நூலின் போகம் உள்ளம் தோய்ந்து உணரும்தோறும் உலவா இன்பம் சுரந்து நிலையாக ஓங்கிவரும். பருகிய

பொழுதுமட்டும் சிறிது சுவைபாய் அவை வறிது கழியும்; இது கருதும் போதெல்லாம் பெரிதும் சுவையாய்ப் பேரின் பம் பயந்துவரும். அவை உடலைக் கொழுக்கச் செய்து மய லில் ஆழ்த்தும்; இது உயிரை வளர்த்து உயர் நிலையில் ஏத்தி யருளும். புத்தி தத்துவத்தில் அனுபவிப்பது ஆதலால் நூலின் சுவை முத்தி இன்பம்போல் என்றும் மூவா முதன்மையை மேவி மிளிர்கிறது. உணர்வின் நுகர்வு உயர்போகம் ஆகிறது.

தேக போகங்கள் மோக வெறிகளாய் முடிகின்றன; ஆன்மபோகம் அறிவின் சுவையாய் அதிசய நிலையில் உயர் கின்றது. பொறி இன்பங்களை நுகருந்தோறும் பொருள்கள் தேய்ந்து மருள்களே விரிகின்றன. அறிவின் சுவையை நுக ருங்கால் அருள் நலஞ் சுரந்து அறமும் இன்பமும் பெருகி வருகின்றன. அவ் வரவால் உயிர் உயர்நிலை யுறுகின்றது.

"In the pursuit of intellectual pleasures lies every virtue; of sensual, every vice." [Goldsmith]

"அறிவின் சுவையில் அறம் வளர்கின்றது; பொறி நுகர்ச்சியில் மறம் விளைகின்றது" என்னும் இது இங்கே அறிய வுரியது. தேக சுகங்கள் அவிவேகமான மயக்கங் களாகின்றன. விவேக விளைவு வியன் கதியாய் விரிகின்றது.

நூலின் நுகர்வு உணர்வு நலங்களை உதவி உயர்ந்த நிலை களில் உய்த்தருளுகின்றது. உயிர்க்கு உய்தி புரிந்து வருத லால் நூலுணர்வு மனிதனுக்குப் புனித போகமாய் நின்றது. உலக போகங்கள் எவற்றினும் இது தலைமையாய் நிலவி அரிய பல உவகை வளங்களை நெறியே அருளி யுள்ளது.

தேகபோகம் அருந்தல் பொருந்தல் என இருவகை நிலை களில் அமைந்துளது. அவை நன்கு அமையும் பொழுது

முதலில் சிறிது சுகமாய்த் தோன்றினும் பின்புபெரிதும் துய ரமாய்முடிகிறது. விடய சுகம் விடம் என்றே நின்றது.

விரிவிடம் விடமதன்று; விடயமே விடமாம்; துன்பம்
புரிவிடம் கொல்வது ஓர்மெய் புலன்மறு பிறப்பும்கொல்லும்.
(வாசிட்டம்)

புலன் நுகர்ச்சியால் விளையும் பயனை இது இனிது விளக்கியுள்ளது. உண்மையை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். பொறி விழைவு வெறியாய் விளிவே புரிகிறது.

மையல் மயக்கங்களே நிறைந்த இந்த வையக வாழ் வில் மெய்யான நூல்களே மேலான துணைகளா யுள்ளன. அந்த நல்ல துணைகளைச் சார்ந்துகொண்டவர் அல்லல்கள் நீங்கி எவ்வழியும் திவ்விய ஆனந்தங்கள் பெறுகின்றனர்.

அல்லலுறும் இவ்வுலகாம் ஆரணியத்து ஓரிரண்டே
நல்ல கனிகளுள நாடுமினோ---சொல்லின் ஒன்று
நூல்ஆகும்; மற்றொன்றோ நுண்ணறிவு சீலமிக்க
மேலோர்நட் பாகும்இது மெய். (தருமதீபிகை)

துன்பங்கள் நிறைந்த இவ்வுலகம் ஆகிய கொடிய நச்சு வனத்தில் இரண்டு இனிய கனிகள் உள்ளன; ஒன்று நூல்; மற்று ஒன்று சிலமுடைய மேலோரது நட்பு என்பதை இங்கே நாம் நுட்பமா நன்கு உணர்ந்து கொள்கின்றோம்.

வஞ்சகம் பொறாமை குரோதம் கோள் சூது வாது கோபம் முதலிய கொடிய தீமைகளே யாண்டும் நிறைந்து நெடிய வெப்பமாய்க் கானல் பரந்து பாலைவனம்போல் விரிந் துள்ள இம் மாநிலத்தில் இனிமையான கனி மரங்கள் நிறைந்த குளிர்பூஞ்சோலைகள் இரண்டு தனி நிலையங்களா யுள்ளன. செழுமையான இந்த இனிய நிழல்களில் மனிதர்

ஓதுங்கினல் மகிழ்வு பெறுவர்; இல்லையானல் கோடை வெயிலில் சிக்கிய மான்கள்போல் மறுகி அலமந்துழலுவார்.

மேலோரது இனிய அறிவின் சாரம் நூல்; சால்புடைய நல்லோர் கேண்மை மேலான மேன்மை யுடையது; இந்த இரண்டும் நல்ல ஆதரவாய் நலம் பல புரிகின்றன.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. (குறள், 783)

மேலான நூலின் சார்பும், பண்புடையாளர் தொடர்பும் இன்ப நிலையங்களாம் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தி யுள்ளார். இருவகை நிலைகளும் ஒருமுகமாய் அறியவந்தன.

அறிவு நூல்களையும் ஆன்றோர்களையும் உரிய துணைகளாக மருவி யுள்ளவர் பெரிய இன்பங்களையும் அரிய மகிமைகளையும் அடைந்து யாண்டும் உயர்வு பெறுகின்றனர்.

"My never-failirg friends are they,
With whom I converse day by day." (Southey)

"அறிவு நூல்கள் எனது இனிய நண்பர்கள்; நாள்தோறும் அவர்களோடு நான் பழகி மகிழ்கின்றேன்" என ராபர்ட் சதே என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறி யிருக்கிறார். நூலோடு பழகல் சாலவும் மேலான நலமாம்.

ஒருவனுடைய வாழ்வு இனிமையும் புனிதமும் அடைய வேண்டுமாயின், உயர்ந்த நூல்களோடும் சிறந்த மேலோர்களோடும் அவன் தொடர்பு கொண்டு யாண்டும் உறவா ஒழுகி வரவேண்டும் என்பது ஈண்டு நுணுகி உணர வந்தது.

"புஸ்தகம் அஸ்த பூஷணம்"

என வடமொழியில் ஒரு பழமொழி வழங்கிவருகிறது. மனிதனுடைய கை நல்ல ஒரு நூலை வைத்திருப்பின் அது

அதற்கு ஒரு அழகிய ஆபரணமாம் என்றதனல் நூலின் சீர்மையும் நீர்மையும் கூர்மையா நன்கு அறியலாகும்.

கல்விமான், நல்ல அறிவாளி, கலா விநோதன் என்பதைக் கையிலுள்ள நூல் நேரே காட்டி விடுகிறது. கையில் வயிரமோதிரம் அணிந்துகொள்வதும், தங்கக் கடிகாரம் புனைந்துகொள்வதும் சிறந்த நாகரிகத்தின் அடையாளமாக இக்காலம் காணப்படினும் அங்கே நூலறிவு இல்லையானல் அவை புல்லிதா எள்ளப்பட்டுப் புலைப்படுகின்றன.

நூல் சிவ ஒளியை ஊட்டுகிறது; அந்த ஊட்டம் இல்லையானல் உணர்வு குன்றி மனிதன் ஒளியிழந்து போகிறான்.

நம் முன்னோர் நமக்காகப் பொறித்து வைத்த கருத்துக்களே நூல்களாய் நிலவி யுள்ளன; அவற்றை உரிமையோடு பேணிக் கொண்டவர் பிறப்புரிமையைப் பெற்றவராகின்றார். பேணுதவர் பிறவிப் பேற்றை இழந்தவராயிழிந்து மடமைக் கொடுமையோடு மறுகி மடிகின்றார்.

"A good book is the precious life-blood of a master-spirit embalmed and treasured up on purpose to a life beyond life." (Milton)

"உயர்ந்த பெரியோரின் அரிய உயிரின் சாரம் பின்வருகிற சந்ததிகளுக்கெல்லாம் உரிமையாக நன்கு பாதுகாத்து வைத்திருப்பதையே நல்ல புத்தகம் என்று நாம் சொல்லி வருகிறோம்" என மில்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் கூறியிருக்கிறார். நூலின் இயல்பு நுனித்து அறிய வந்தது.

பெரிய மகான்களுடைய அறிவு நலங்களைக் கருதியுணரும் அளவு மனித சமுதாயம் மகிமை அடைந்து வருகிறது. மக்களுடைய உள்ளங்களைப் புதுமையாக உயர்த்திப் புத்-

தொளி அளித்துத் தத்துவ நலங்களை அருளி வருதலால் நூல்கள் புத்தகங்கள் என வித்தக நாமங்களோடு வந்தன.

புத்தி நலம்அருளிப் புத்துயிர் தந்துவரும்
புத்தகமே புத்தக மாம்.

என்றதனால் எத்தகைய நிலைகளையுடையது புத்தகம் என்பதை உய்த்து உணர்ந்து கொள்ளலாம். மனிதனுடைய அகத்தைப் புனிதமாக்கிப் புதுப்பித்துவருவதேபுத்தகமாம். அல்லாத மற்றவை யெல்லாம் வெறும் செத்தைகளே.

உயர்ந்த கருத்துக்கள் நிறைந்த நூல்கள் உயிரினங்களை உயர்த்தி வருகின்றன; பெரிய அறிவின் சாரங்கள் அரிய ஆன்ம போகங்களாய் இனிது அமைந்து நிற்கின்றன.

என்றும் அழியாத இன்ப நிலையங்களாயுள்ள இனிய நூல்களை நன்கு பேணி நாடி உணர்பவர் நலம் பல பெறுகின்றார். பேணாதவர் பேதைகளா யிழிகின்றார். அருந்தல் பொருந்தல்கள் ஆன தேக போகங்களையே பலர் ஆவலோடு யாண்டும் விரும்புகின்றனர்; அறிவு நூல்களை யாதும் விரும்பாமல் வெறியராய் விலகி நிற்கின்றனர். அந்த அவல நிலை ஒழிய வேண்டும் என்று மேலோர் கவலை பூண்டுள்ளனர்.

பால்வேண்டும் பழம்வேண்டும் பணம்வேண்டும்
பதம்வேண்டும் பதவிக் கெல்லாம்
மேல்வேண்டும் நிலைவேண்டும் வேணவெல்லாம்
வேண்டும்என விளிவே வேண்டி
மால்வேண்டும் பெரியர்பலர் மதிவேண்டும்
எனவேண்டி மாண்பு மிக்க
நூல்வேண்டும் எனவேண்டும் நோக்கிலராய்
நோக்கிழந்தார் நோக்கம் என்னே?

இப்பாட்டு இந்நாட்டு மக்கள் இந்நாள் உள்ள நிலைமையைக் காட்டி வந்துள்ளது. எதையெல்லாமோ வேண்டும் வேண்டும் என்று வெறி கொண்டு திரிகின்றனர்; அறிவு நூல்கள் வேண்டும் என்ற எண்ணமே யில்லாமல் இறுமாந்து வாழ்ந்து சிறு மாந்தராய்த் தேய்ந்து போகின்றனர்.

தன்பால் வந்து இரந்த வறியவருக்கு அரைக்காசும் உதவாமல் இரக்கமின்றி விரட்டுகின்றார்; அவரே ஆயிரம் ஆயிரம் ஆகத் தம் பொருளை அள்ளி வீசி "இந்த ஒரு தேறுதலில் எனைத் தேற்றவேண்டும்" என்று எல்லாரிடமும்போய் இரந்து வேண்டி ஏங்கி நிற்கின்றார். அப்படி வந்தவரிடம் "இவ்வூரில் ஒரு புத்தக நிலையம் வைக்கப் போகின்றோம்; அதற்குப் பத்தாயிரம் ரூபாய் தாரும்" என்றால் தந்துவிடுகின்றார். மடமை வெறிகள் எங்கும் கொடுமையாய் நிற்கின்றன.

தாம் நேரே ஒரு புத்தகம் வாங்கிப் படிக்க மாட்டாதவர் இப்படிப் பித்தராய்ப் பேயாட்டம் ஆடுகின்றார். பொறி வெறிகளும், பதவி மோகங்களும் மக்களை வெறிகொண்ட பேய்கள் ஆக்கி வீணே வதைத்து வருகின்றன. நேர்மை நீதி அறிவு சீலம் யாவும் பாழ்போய் மனிதர் பரிதாப நிலையில் பழுது பட்டுள்ளனர். இழுதைகளாய் இழிந்திருந்தும் பெரிய மனிதர் எனத் தம்மை அவர் வெளியே காட்டிப் பேயாட்டம் ஆடிவருவது நோயாட்டமாய்ப் பெருகி வருகிறது. பெரும் பொருள்கள் இருந்தும் காலவசதிகள் அமைந்தும் பெரும்பாலும் பலர் அறிவு நூல்களை விரும்பாமலே அவலமா யுழலுகின்றனர். வாய்க்குச் சுவைகளை வரிசையாய் விரும்புகின்றனர்; அறிவின் சுவையை யாதும் நாடாமல் வெறிகளையே நாடி யாண்டும் அவ கேடரா யுள்ளனர்.

"தமிழ்ச்சுவை அறியாத் தம்பங்கள்
அவிச்சுவை அறிந்து அசைந்து திரிவன"

என்று நம்பியாண்டார் நம்பிகள் இங்ஙனம் வெம்பி வெதும்பியுள்ளார். அறிய வுரியதை அறியாமல் அவலமா யலைகிறார்.

"நம் நாட்டில உணவு நாட்டம் ஓங்கி வருகிறது; உணர்வு நாட்டம் தூங்கி நிற்கிறது" என்று ஒரு பெரியவர் ஏங்கியிருக்கின்றார். ஏக்கமும் தூக்கமும் நோக்காடாயின.

உடலின் பசி உணவை நாடுகிறது; அதுபோல் உணர்வுள் பசி இருந்தால் நூல்களை நாடுவர். அறிவுத்தாகம் இல்லாமல் புத்தி மந்தப்பட்டுள்ளமையால் புத்தகங்களை விரும்பாமல் புறமே போகின்றனர். அந்தப்பொல்லாத போக்கை நல்ல நோக்கால் மாற்றிக் கொள்ளவேண்டும். பழகியது பலனும் வருகிறது. நூலோடு பழகின் மேலான இன்பமாம்.

மனிதன் பழக்கத்தின் கட்டு; பயிற்சியால் உயர்ச்சி அடையலாம். நல்ல நூல்களைப் படித்துச் சுவை கண்டால் எல்லை யில்லாத இன்ப நலங்களை எதிரே காணலாம். பால் உடலை வளர்ப்பதுபோல் நூல் உயிரை வளர்க்கிறது. நூல் பல நுகர்ந்து சால்பு அமைந்து சிலமாய் ஒழுக வேண்டும்.

நம் தாய்மொழி ஆகிய தமிழை வளர்க்க வேண்டும் என்று சிலர் இக்காலில் ஆரவாரமாய்க் கிளர்ச்சிகள் செய்கின்றனர். வளர்ச்சி இன்னது என்று தெரியாமல் அவர் பன்னிப் பேசுவது பரிதாபமாயுள்ளது. வளர்ப்பது என்றால் தமிழுக்குப் பாலும் சோறும் ஊட்டுவதா? எண்ணெய் தேய்த்து முழுக்கு ஆட்டுவதா? சிப்பிட்டு வாரிப் பூச்சூட்டிப் போற்றுவதா? பட்டுடை புனைந்து பணிகள் பூட்டுவதா?

நெஞ்சை நிதானமாக வைத்துக்கொஞ்சம் சிந்தனைசெய்து உணர வேண்டும். உண்மையை ஓர்ந்து தெளிவது நன்மை.

தமிழ்மொழி நாதப் பிரமமாய், அறிவுத் தெய்வமாய் என்னும் குன்றாத ஒளியை யாண்டும் வீசி நீண்டு நிலவி நெடிது ஓங்கி யுள்ளது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் மாண்டு கழிந்தும் அது இளமை நலம் யாதும் குன்றாமல் வளமை சுரந்து எழில் ஒளிவீசி விழுமிய நிலையில் விளங்கி நிற்கிறது.

அதிசய நிலையில் துதிகொண்டுள்ள இத் தெய்வத் தமிழைத் தம் அறிவின் அளவு பயின்று தாம்நெறியேவளர்ந்து கொள்ள வேண்டும். தமிழின் எழில் ஒளிகளாய் வெளியே வீசியுள்ள நூல்களுள் சிலவேனும் பயின்று தான் வளர்ந்து வரின் அவனே தமிழ்த் தாய்க்கு உரிய இனிய புதல்வன் ஆகின்றான். உரிமையைப் பேணிவரும் அளவுபெருமையாம்.

தான் யாதும் படியாமலும், படிப்புக்கு உதவி புரியாமலும், படித்தவர்பால் அன்பும் மதிப்பும் மரியாதையும் காட்டாமலும் தமிழ் வளர்ச்சியைப் பற்றிச் சிலர் கிளர்ச்சியாய்க் கிளர்ந்து தருக்கிப் பேசுவது கிறுக்குத்தனமேயாம்.

பால்ஊட்டிச் சோறூட்டிப் பசுந்தமிழை
வளர்ப்பதுபோல் பரிவு காட்டி
மால்ஊட்டித் திரிகின்ற மதியுடையீர்!
மதிஒன்று மதித்துக் கேண்மின்!
நால்ஊட்டி நலம்ஊட்டி நவம்ஊட்டி
வளர்தமிழை நாடி நீங்கள்
தால்ஊட்டிப் படியுங்கள் தாயன்பு
செய்யுங்கள் தகைமை ஆமே. (1)

நால்--அறம்பொருள்இன்பம் வீடு. நவம்--ஒன்பதுசுவைகள்.

ஒருநூறு குறளேனும் உள்ளத்தில்
பதிவுசெய்க; உயர்நூல் தம்முள்
இருநூறு கவிகளையும் இயல்சங்க
நெறிகளையும் எண்ணி ஆய்ந்து
பெருநீர்மை யுடன்வாழ்க; பேருலகில்
மானிடனுய்ப் பிறந்தும் பேசும்
திருவான மொழிபயிலார் திருவிலிக
ளாயிழிவர் தெளிக தேர்ந்தே. (2)
(இந்தியத்தாய் நிலை-)

தமிழ் மொழியின் நிலைமையையும், அதனைப் பயின்று உயர வேண்டிய வகையினையும் இவை தொகையாக விளக்கியுள்ளன. உரிய மொழியைப் படித்துவரும் அளவு அரிய பெருமைகள் அடுத்துவரும். தாயின் பால்போல் தாய் மொழி நூல் தகைமை தோய்ந்து இனிமை வாய்ந்து இன்பம் சுரந்துளது.

பால் குடியாத பிள்ளை உடல் மெலிந்து ஊனம் அடைகின்றது; நூல் படியாத மனிதன் அறிவு குறைந்து அவலம் உறுகின்றுன். உடற்குப் பால் போல் உயிர்க்கு நூல். அரிய உயிரை இனிது பேணுவது பெரிதும் நலமாம். உண்மையை ஓர்ந்து உணர்ந்து நன்மையை விரைந்து பெற வேண்டும்.

மனித வாழ்வு எதனுல் இயங்கி வருகிறது?
வாய்மொழி தாய்மொழி ஆயது ஏன்?
மொழி எதனுல் ஒளிபெற்று உளது?
நூல் என்றுல் என்ன?
அதனேடு பழகி வருவதால் வரும் பயன் யாது?
அறிவுக்கு இனிய சுவை எது?

இந்தக் கேள்விகளுக்கு உரிய விடைகளை இப் பகுதியில் ஆராய்ந்து சிந்தனை செய்து நன்கு தெளிந்து கொள்ளுக.

—oo:o:oo—

# மூன்றாவது அதிகாரம்.

## கல்வி

மனிதனுக்குப் புதிய ஒளியை ஊட்டி அருளுகிற மதி நலத்தைக் கல்வி என்று சொல்லி வருகிறோம். அறிவு ஆன்ம ஒளி; கல்வி அதன் விழியாயுள்ளது. உடலுக்குக் கண்போல் உயிர்க்குக் கல்வி அமைந்துள்ளமையால் அது கண் என வந்தது. முகத்தில் உள்ள கண்களால் உலகப்பொருள்களைக் கண்டு வருகிறோம். அகக்கண் ஆகிய கல்வியால் அறிவுப் பொருள்களை யாண்டும் அறிந்து வருகிறோம். ஆன்மாவின் அக விழியாய் மேன்மை எய்தியுள்ள இதன் ஒளியும் உயர்வும் உரனும் திறனும் அதிசயமான மகிமைகள் உடையன.

இறந்தகாலம் என்னும் பரந்த திரையால் மறைந்து போயுள்ள எத்தனையோ புண்ணிய புருடர்களையும் எவ்வளவோ அரிய பல நிலைகளையும் இருந்த இடத்தில் அமர்ந்து கொண்டே கல்வி ஆகிய கண்ணால் நேரே நாம் கண்டு களித்து வருகின்றோம். அக்காட்சிகளைக் கருதி உணருந்தோறும் உறுதிநலங்கள் பெருகி அதிசய மாட்சிகள் மருவி வருகின்றன. மூலமும் நடுவும் ஈறும் இல்லாமல் கால தேச நிலைகளைக் கடந்துள்ள பரம்பொருளையும் அனுமான அளவைகளால் வரம்பு செய்து காண்கின்றோம். இவ்வாறு அதிசயமான பல அற்புதக் காட்சிகளை மருவியுள்ளமையால் கல்வியை ஞானக்கண் என வானமும் வையமும் விழைந்து புகழ்ந்து வர நேர்ந்தன. புகழ்ச்சி நிலை அதன் உயர்ச்சி நலனை உணர்த்தி உறுதி யுண்மைகளைத் துலக்கி நின்றது.

மனித உருவில் மருவியிருந்தாலும் கல்வியறிவுடையவன் தனியான ஒரு தெய்வீக நிலையில் உயர்ந்து நிற்கின்றான். அவனுடைய உணர்வுக் காட்சியில் உண்மைப் பொருள்கள் எண்மையாய் உரிமையோடு ஒளி புரிந்து வருகின்றன. எல்லா வழியாலும் எவ்வகையாலும் அறிய முடியாத பரமனும் கல்வியறிவில் கனிந்துவந்து இனிது தோன்றுகின்றான்.

"கற்றவர் விழுங்கும் கற்பகக் கனி"

என இறைவனைக் குறித்து ஒரு பெரியவர் இப்படிப் பாடியிருக்கிறார். . கற்பின் அகத்தில் கற்பகம் கனிவது அற்புத விளைவாயமைந்தது. உரியதில் அரியது ஒளி செய்துள்ளது.

"கற்றவர் வளைத்துத் திரிபுரம் எரித்தோன்
கற்றவர் கருத்தினுல் காண்போன்" (பாரதம்)

மேருமலையை வில்லாக வளைத்துத் திரிபுரம் எரித்த சிவபெருமான் கல்வியாளர் உள்ளத்தில் காணும் காட்சிப் பொருள் என இது காட்டியுள்ளது. கல்—மலை. தவர்—வில். கல்லை வில்லாகக் கொண்டு பொல்லாதவர்களை அழித்து எல்லாம் வல்லவனுய் எங்கும் என்றும் விளங்கும் அவனும் கல்வியறிவில் தனி உரிமையாக இனிது மருவியுள்ளான் என்றதனுல் கல்வியின் மாட்சியும் காட்சியும் இங்கே நன்கு காணவந்தன. தெய்வநிலையமாயுளது திவ்விய மகிமையாயது.

இறைவன் வாலறிவன் ஆதலால் நூலறிவாளரோடு அவன் சாலவும் உறவுரிமையுடன் தொடர்பு கொண்டுள்ளான். ஆகவே கலை ஞானிகளுடைய தலைமையும் நிலைமையும் தகைமையும் வகைமையும் தொகையாக அறியலாகும்.

சூரியன் இருளை நீக்கி உலகை ஒளிசெய்து வருகிறான்; கல்வி மருளை நீக்கி உயிரை ஒளிசெய்து வருகிறது. பரமாத்

துமாவின் ஒளி விழியாய் அவன் உலாவி வருகிறான்; இது சீவாத்துமாவின் தெளி விழியாய்ச் சிறந்து திகழ்கின்றது.

எண்ணும் எழுத்தும் உயிர்க்குக் கண்.

எனத் தேவர் இவ்வண்ணம் கல்வியைக் குறித்திருக்கிறார்.

"கற்றறிவாளர் கருத்தில் ஓர் கண் உண்டு"

என்று கல்வியின் ஒரு மூல நிலையைத் திருமூலர் இவ்வாறு உரைத்தருளினர். உரைக் குறிப்புகள் ஊன்றி உணரவுரியன.

ஊனக்கண் போல ஒருநோக்கோ கல்விஎனும்
ஞானக்கண் கோடி நலநோக்கும்---வானக்கண்
நின்றொளிரும் ஆதவனும் நேராக இக்கண்எதிர்
நன்றொளிரும் அன்றோ நயந்து.

கல்வி ஞானக் கண்; அது பல கோடி காட்சிகளை ஏக காலத்தில் காணவல்லது; ஆயிரங் கிரணங்களையுடைய வான சூரியனும் இந்த ஞான சூரியன் எதிரே மோனமாவியந்து நிற்பன் எனக் கல்வியின் நிலையை இது உவந்து கூறியுளது.

சென்ற காலங்களையும், நிகழ் காலங்களையும், வருங் காலங்களையும் நெடிது நோக்கி அளவிடலரிய பொருள் நிலைகளைக் கருதிக் காணும் அரிய அதிசயக் காட்சிகளையுடையது ஆதலால் நூலோரும் மேலோரும் கல்வியைக் கண் என்று உரிமையுடன் உவந்து பெருமையாக் கூற நேர்ந்தார்.

மிகவும் அருமையான பொருளைக் கண் என்றும், உயிர் என்றும் பிரியமாகப் புனைந்து சொல்வது மனித இயல்பு ஆதலால் அந்த உரிமையில் கல்வி இங்கே உரையாட வந்தது. உரைக் குறிப்பு உயர்ச்சி நிலையை உணர்த்தியுள்ளது.

என் கண்; என் உயிர் எனத் தனது அருமை மகனை இராமனைத் தசரதன் உளம் உருகி உரைத்திருக்கிறான். தச

ர்தனுக்கு இராமன் எப்படியோ அப்படி மனித சமுதாயத் துக்குக் கல்வி மருவியுள்ளது. அந்த அருமைத் திருமகனைப் பெற்றபின் மலடன் என்னும் பழி நீங்கி அம்மன்னர்பிரான் பெருமை மிகப் பெற்றான்; இந்த அருமைக் கல்வியைப் பெற்றபின் மடையன் என்னும் இழிவு நீங்கி மனித இனம் மகிமைமிகப்பெற்றது. பெற்றபேறுகள்உய்த்துணரவுரியன.

காட்டு விலங்குகளைவிட மனிதன் பெரியவன், உயர்ந்த வன் என்று காட்டி வருவது கல்வியைக் கண்டு வருவதனு லே யாம். மனிதப் பிறப்பு இயல்பாகவே உயர்வுடையது; ஆயினும் கல்வி நலம் தோய்ந்த பின்பே அவ்வுயர்வு உறுதி யாய் அமைந்து வருகிறது. கல்வி தோயவில்லை ஆனால் அந்த மனிதன் விலங்காகவே விலகி அயலே அயர்ந்து நிற்கின்றான்.

ஒருகாலும் நீங்கா உயர்கல்வி இன்றேல்
இருகால் விலங்கே இவண். (அரும்பொருளமுதம்)

கல்வி இல்லையானால் மனிதனுக்கு நேரும் இழிநிலைமை இது விழிதெரிய விளக்கியுள்ளது. சிறந்த அறிவுநலம்இழந்து போனமையால் இழிந்த மிருகம் எனக் கழிய நேர்ந்தான்.

கல்வி நலம் இழந்தபோது மனிதனது நிலைமையைக் குறித்துக் கிரீஸ் தேசத்துத் தத்துவ ஞானி ஆன பிளாட் டோ (Plato) என்பவர் குறித்திருப்பது அயலே வருகிறது.

**"Man is a two-legged animal."** **[Plato]**

"கல்வி இல்லையானால் மனிதன் இரண்டு காலுள்ள மிருகம்" என்னும் இது இங்கே அறிய வுரியது. சிறப்பான மதிமாட்சிகுன்றிய அளவில் பிறப்பும் பிழைபட நேர்ந்தது.

இவ்வாறு இழிவுகள் நேராதபடி கல்வியை இளமையி லேயே பயின்று பழகி மனித சமுதாயம் வளமையாய் வளர்ந்து வரலாயது. அவ் வளர்ச்சி வரன்முறையாயுளது.

தன் பிள்ளைக்கு ஐந்து வயது ஆனவுடனே தந்தை அவ்வனைப் பள்ளியில் படிக்க வைக்கிருன். பாலன் போய்ப்படித்து வரும் இடம் பள்ளிக்கூடம் என வழங்கப்படுகிறது. கலை பயிலும் நிலையம் அதன் தலைமையை விளக்கி நிற்கின்றது.

பள்ளி என்னும் சொல் உள்ளம் உயர்ந்த சிறந்த முனிவர்கள் வசிக்கும் ஆசிரமத்தைத் தனியுரிமையாக் குறித்து வரும். மதிநலம் மிகுந்த அத்தகைய பெரியோரையே ஆசிரியராகப் போற்றி அவரிடம் கொண்டுபோய்த் தம் மக்களை ஒப்பித்துவிடுவது பெற்ருேர் வழக்கமாப் பண்டு இருந்து வந்தது ஆதலால் பிள்ளைகள் படிக்கும் இடம் பள்ளி என வழங்கிவரலாயது. வளமை வழக்கு பழமையைத் துலக்கியுளது.

ஏமாங்கத நாட்டு மன்னன் மகன் ஆகிய சீவகனை இளமையில் பள்ளியில் வைத்த முறையும், அவன் பல கலைகளையும் படித்து உயர்ந்த நிலையும் சீவகசிந்தாமணி என்னும் காவியத்தில் ஓவியமா வடித்துக் காட்டப்பட் டுள்ளன.

அரும்பொனும் மணியும் முத்தும் காணமும் குறுணி ஆகப்
பரந்தெலாப் பிரப்புவைத்துப் பைம்பொன்செய் தவிசின் உச்சி
இருந்துபொன் ஓலை செம்பொன் ஊசியால் எழுதி ஏற்பத்
திருந்துபொற் கண்ணியாற்குச் செல்வியைச்சேர்த்திருரே.

நாமகள் நலத்தை எல்லாம் நயந்துடன் பருகி நன்னூல்
ஏமுதலாய எல்லாப் படைக்கலத் தொழிலும் முற்றிக்
காமனும் கனிய வைத்த புலம்கரை கண்டு கண்ணுர்
பூமகள் பொலிந்த மார்பன் புவிமிசைத் திலகம் ஒத்தான்.

(சீவக, நாமகள் இலம்பகம்)

சீவகன் பலகலைகளையும் பயின்று கல்வியறிவில் சிறந்து இவ்வுலகில் ஒரு திலகமாய் உயர்ந்து விளங்கினுன் என்பதை இதனுல் உணர்ந்து கொள்கிருேம். சிறந்த மகனுய்ப் பிறந்து

வன் இளமையிலிருந்தே நூலறிவோடு தோய்ந்து வளர்ந்து வரவேண்டும்; அவ்வாறு வரின் உயர்ந்த மனிதனய் அவன் ஒளிபுரிந்து விளங்குவான் என்னும் உண்மையை இந்த அரச குமாரன் சரிதம் இங்கே நன்கு அறிவுறுத்தி யுள்ளது.

"இளமையில் கல்."

என ஒளவையார் இவ்வாறு அருளியது பாலப் பருவத்துக்கும் நூலறிவுக்கும் உள்ள தொடர்பை நுனித்து உணரச் செய்தது. மானச தத்துவம் இதில் மருவியுள்ளது.

குழந்தை உள்ளம் சஞ்சலம் இல்லாதது; உல்லாசமான சுறு சுறுப்புள்ளது; மாசு படியாதது; தன்பால் படிந்ததை நன்கு பற்றிக் கொள்ளும் பெற்றி வாய்ந்தது; ஆதலால் இளமைப் பருவம் கல்விக்கு வளமாய் அமைந்து வந்தது.

அழுக்குப் படியாத கண்ணாடியில் உருவங்கள் தெளிவாகத் தோன்றுதல் போல் இழுக்குப் படியாத இளைஞர் உள்ளங்களில் எழுத்தறிவு அழுத்தமாகப் பதியும்; அப்பதிவு மதிநலம் சுரந்து மாண்பு புரிந்து அதிசய நிலையில் வளர்ந்து வரும். அவ்வரவால் அரிய பலநலங்கள் இனிது விளைகின்றன.

இளமைப் பருவத்தைக் கல்வியில் கழித்தவன் நல்ல அறிவாளியாய் உயர்ந்து வாழ்நாள் முழுவதும் தகுதியோடு வாழ நேர்கின்றான்; அங்ஙனம் இளமையில் கல்லாதவன் மூடமாய் வளர்ந்து நிமிர்ந்து பீடையாய் வாழ்ந்து பிழையாயிழிந்து எவ்வழியும் அவலமாய் அழிந்து போகின்றான்.

"இளமையில் கல்லாதான் மூப்பு இன்னா."

என்றது இனிமையை இழந்த அவ்வாழ்வின் இளிவைத் தெளிவாக்கி நின்றது. கல்வி நலம் இல்லாமையால் அல்ல

னும் அவமானமும் அங்கே அடர்ந்து தொடர்ந்து யாண்டும் பழியாய் அழிவு செய்யும் என்பது வெளியாய் வந்தது.

"இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்."

என்றார் விளம்பி நாகனார். இளமையில் கல்லாமல் நின்றால் மனித வாழ்வில் அது கொடிய குற்றமாம்; அதனால் நெடிய துயரங்கள் நேரும் என்பது இங்கே முடிவாய் நின்றது.

கல்விக்கே உரிமையாக அமைந்த இனிய பருவத்தைப் பயன்படுத்தாமல் பழுது படுத்தின் அந்த மனித வாழ்வு பழியடைந்து பாழாகின்றது. அவ்வாறு பாழாகாமல் மனிதன் மதிப்போடு செவ்வையாக வாழவேண்டும் என்றே மேலோர் எல்லோரும் நூலோதி வரும்படி பாலப் பருவத்தை இங்ஙனம் சால்வும் உரிமையா வரைந்து கூறினர்.

"சிறுமையில் கல்வி சிலையில் எழுத்து."

இளமையில் கற்ற கல்வி கல்லின்மேல் எழுதிய எழுத்தைப்போல் நிலைத்து நிற்கும் என்பதை இது உணர்த்தி நின்றது. படிக்க உரிய பருவம் படி அறிய வந்தது.

எண் எழுத்து இகழேல்.
ஓதுவது ஒழியேல்.
நூல் பல கல்.
கேள்வி முயல்.
வித்தை விரும்பு.
எண்ணும் எழுத்தும் கண்எனத் தகும்.
கைப்பொருள் தன்னின் மெய்ப் பொருள் கல்வி.
ஓதா தார்க்கு இல்லை உணர்வொடும் ஒழுக்கம்.

கல்வியைக் குறித்து ஔவையார் இவ்வாறு பரிவோடு உரிமை கூர்ந்து உரைத்திருக்கிறார். உரையிலுள்ள பொருள் நலங்களும் குறிப்பு நிலைகளும் ஊன்றி உணர வுரியன.

உணவு எவ்வாறு உடலுக்கு உறுதியாய் அமைந்திருக்கிறதோ அவ்வாறே கல்வி உயிருக்கு அவசிய உரிமையாய் அமைந்துள்ளது. உணவு இல்லையானல் நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் முதலிய தொழில்களை உடல் செய்யமாட்டாது; அதுபோலவே கல்வி இல்லை ஆனல் நன்மை தீமைகளை நாடி அறிய மாட்டாமல் மென்மையா யிழிந்து மேன்மை குலைந்து உயிர் புன்மையாய்ப் புலர்ந்து தவிக்கும்.

பறவைக்குச் சிறகுகள்போல் மனிதனுக்குக் கல்வி அறிவு உறுதி புரிந்துள்ளது; அதனை யுடையவன் எங்கும் துணிந்து செல்கின்ருன். எந்த நாடும் அவனுக்குச் சொந்த நாடாய் வந்தனை புரிகிறது; வழிபாடுகள் செய்கின்றது.

கல்வியறிவில்லாதவன் சிறகிழந்த பறவைபோல் வலிவிழந்து பிறந்த இடத்திலேயே யிருந்து மடிகின்ருன். கல்வியில்லை யானல் கண் இருந்தும் குருடனுய்க், காதிருந்தும் செவிடனுய், உயிர் இருந்தும் சடமாய் மனிதன் இழிந்துபடுவதை அனுபவத்தில் நேரே அறிந்து பரிந்து வருகிருேம்.

உணர்வை ஒளிசெய்து உள்ளத்தைத் தெளிவாக்கி எல்லா வகைகளிலும் மனிதனை வல்லவன் ஆக்கிக் கல்வி மாண்புறுத்தி வருதலால் அதனைப் பெற்றவன் பெரிய பாக்கியவானுய் அரிய மகிமைகள் யாவும் ஒருங்கே அடைகின்ருன்.

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. (குறள் 400)

தனக்கு இனிய உரிமையாக மனிதன் ஈட்டிக்கொள்ள வேண்டிய அரிய பெரிய செல்வம் கல்வியே என வள்ளுவப் பெருந்தகை இங்ஙனம் உள்ளம் உவந்து உரைத்திருக்கிருர். அடைமொழிகள் உயர்ந்த பெற்றிகளை உணர்த்தின.

அழிவு இன்மையும் விழுமிய தன்மையும் வேறு செல்வங்களுக்கு இல்லை ஆதலால் அந்த அதிசய நீர்மைகளைத் தனி உரிமையாக உடைய கல்வியின் மகிமையும் மாண்பும் தலைமையும் நிலைமையும் இங்கே இனிது தெளிய வந்தன.

மணி பொன் நிலம் முதலிய பொருள்களையே உலகம் செல்வம் ஆகக் கருதி வருகிறது; அந்தக் கருத்தை மாற்றிக் கொள்ளும்படி உண்மைச் செல்வத்தை ஈண்டு உணர்த்தியருளினர். உண்மையை ஊன்றி உணர்ந்து கொள்ளவும்.

அழிவில்லாத சிறந்த செல்வம் கல்வியே; அதனை முதலில் உரிமையோடு ஈட்டிக்கொள்! அதன் வழியே விழுமிய நலங்கள் யாவும் எளிதே விளைந்து இன்பங்கள் சுரந்து வரும் என்பது இங்கே நன்கு தெரிந்து கொள்ள வந்தது.

கல்வியும் செல்வமும் மனிதனுக்கு அவசிய உரிமைகளாய் அமைந்திருக்கின்றன. இருப்பினும் இரண்டுக்கும் இடையே வேறுபாடுகளும் மாறுபாடுகளும் பல உள்ளன.

கல்வி உயிர் போல்வது.

செல்வம் உடல் போல்வது.

அது அழியாத நிலையது.

இது அழிந்து கழிவது.

அது அறிவின் சுவைகளை அருள்வது.

இது பொறிவெறிகளைத் தருவது.

இன்னவாறு நிலையிலும் நீர்மையிலும் உறவிலும் உறுதியிலும் வரவிலும் செலவிலும் பல பிளவுகள் தோய்ந்துள்ளன.

கல்வி உள்ளேயிருந்து விளைவது; ஆன்ம ஒளியாயுள்ளது; அமுத மயமானது; அடுத்தவர்க்கு அருள்வது; கொடுக்கக் கொடுக்கக் குறையாதது; எடுக்குந் தோறும் பெருகுவது;

ஊயும்தோறும் வளர்வது; எவராலும் கவர்ந்து கொள்ள முடியாதது; என்றும் நீங்காமல் எவ்வழியும் அழியாமல் எழுமையும் தொடர்ந்துவிழுமிய நலங்களை விளைத்துவருவது; அதனால் கேடு இல் விழுச் செல்வம் எனப் பீடும் பெருமையும் பெற்றுள்ளது. கேடு இல்லாதது; விழுமிய நிலையது என்று இதனைத் தலைமையா விளக்கியதனால் மற்றச் செல்வத்தின் நிலைமைகளும் நீர்மைகளும் நேரே நன்கு தெரியலாகும்.

செல்வம் அயல் இருந்து வருவது; மயல் மிகுந்து புரிவது; அல்வழியில் பெருகுவது; நல்வழியை ஒருவுவது; கொடுக்கக் குறைவது; எடுக்கத் தேய்வது; தாயத்தார் பகுப்பது; கள்வர் பகைவர் முதலாயினோரால் கவர்ந்து கொள்ளப்படுவது; உள்ளச்செருக்கை விளைத்து உடையவனைக் கெடுப்பது; எள்ளல் இழிவுகளில் இழுத்துச்சென்று அல்லல் பலகொடுப்பது; கடுத்து அழிவது ஆதலால் கேடும் சிறுமையும் நீள உடையது என இது நாடறிய நின்றது.

மடமைக் களிப்பை விளைத்து உடலோடு ஒழிந்து போகின்ற செல்வத்தினும் உணர்வின் சுவையைப் பெருக்கி என்றும் உயிரோடு ஒன்றி நின்று உலவாத இன்பங்களை அருளிவரும் கல்வி எவ்வளவு மகிமை யுடையது! எத்துணை மேன்மை வாய்ந்தது! ஈண்டுஇதனை உய்த்துஉணரவேண்டும்.

மாற்படு புந்தியின் மறுவில் சேதனம்
பாற்படும் உயிர்க்கெலாம் பவத்தின் மாண்பயன்
நூற்படு கல்வியின் நுவல் வளத்தினின்
மேற்படு கின்றதில் விழுமிது இல்லையே. **(கந்தபுராணம்)**

வைக்கும் பொருளும் இல்வாழ்க்கைப்
பொருளும் மற்று எப்பொருளும்

பொய்க்கும் பொருள் அன்றி நீடும்
 பொருள் அல்ல; பூதலத்தில்
மெய்க்கும் பொருளும் அழியாப்
 பொருளும் விழுப்பொருளும்
உய்க்கும் பொருளும் கலைமான்
 உணர்த்தும் உரைப்பொருளே. (சரசுவதி அந்தாதி)

வைப்புழிக் கோட்படா; வாய்த்தீயின் கேடில்லை;
மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார்;
எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற்று அல்ல பிற. (நாலடியார்)

வெள்ளத்தால் அழியாது; வெந்தழலால்
 வேகாது; வேந்தராலும்
கொள்ளத்தான் இயலாது; கொடுத்தாலும்
 குறையாது; கொடிய தீய
கள்ளத்தார் எவராலும் களவாட
 முடியாது; கல்வி என்னும்
உள்ளத்தே பொருள்இருக்க உலகெங்கும
 பொருள்தேடி உழல்வது என்னே?
(விவேக சிந்தாமணி)

கல்வி அழியாத விழுமிய செல்வம் என்பதை இவை காட்டியுள்ளன. காட்சிகளைக் கண் ஊன்றி நோக்கின் கருத்துக்களை நன்கு உணர்ந்து நயம்தெரிந்துகொள்ளலாம்.

கல்வி என்னும் சொல்லே அது மனிதனுக்கு உரியது என்பதை இனிது உணர்த்துகின்றது. கல்லுதல், கிளைத்தல், தோண்டுதல், துருவுதல் என்னும் வினைக்குறிப்புகளால் கல்வி என்னும் பேர்காரணங்களோடுவிளைந்து வந்துள்ளது.

மனிதனிடம் இயல்பாக அமைந்துள்ள அறிவைக் கிளைத்து வளர்த்து விருத்தி ஆக்கிக்கொள்ளின் அது கல்வி

ஆகின்றது. மேலோர்களுடைய அறிவு நலங்களை நூல்கள் வாயிலாத் துருவி உணர்ந்து வருவதே கல்வியாய்ச் சுரந்து வருகிறது. பயில வருவதின் பாடு தெரிய வந்தது.

கல்வி விளைவுக்கு நூல்கள் சாதனங்களாயுள்ளன. ஆசிரியர்கள் ஆதாரவாய் நிற்கின்றனர். படர்கின்ற பசிய இளங்கொடிக்குக் கொழு கொம்புபோல் போதகன் ஆதாரவாய் நின்று பயின்றுவரும் இளம் பாலனுக்கு உறுதி நலனை உதவி வருகிறான். வளர்ச்சி உள்ளே யிருந்து வருகிறது. அவ்விளைவுக்கு வெளிவசதிகளாய் நூல்களும்போதனைகளும் மேவி யுள்ளன. கலையின் நிலை கருதி உணர வுரியது.

கல்வி வெளியிலிருந்து வரவில்லை; மனிதனுடைய உள்ளத்திலிருந்தே ஒளிபெற்று அது ஓங்கி வருகின்றது. மண்ணில் புதைந்து கிடக்கும் பொன்னைத் தோண்டி எடுத்துக் கொள்ளுவதுபோல் எண்ணில் புதைந்து கிடக்கும் அறிவைப் பயின்று பெற்றுக்கொள்கிறோம். இயல்பாகவே அறிவுடைய மனிதன் பயிற்சியால் உயர்ச்சி அடைந்துகொள்கிறான். உள்ளம்பயில உணர்வுகள் ஒளிபெற்று வருகின்றன.

மன ஒருமையோடு கருதிப் பயிலும் அளவு கல்வி பெருகி வருகிறது. கருத்தை ஊன்றிப் படித்தவன் கல்வியில் விரைந்து விருத்தி யடைகின்றான். கூர்மையானகவனம் சீர்மையான கல்வியாய்ச் சிறந்து நிறைந்து விளைகிறது.

**"The very essence of education is concentration of mind"**

"மன ஒருமையே கல்வியின் சாரம்" எனச் சுவாமி விவேகானந்தர் இவ்வாறு உரைத்திருக்கிறார். கருதிப் பயிலுவதில் நினைவுநிலைபெறுகிறது; அதனால் அறிவுபெருகுகிறது; ஒருமையோடு ஊன்றி நோக்குவது யோகக் காட்சியாய் உயர்ந்து அரிய பல மாட்சிகளை அடைந்து கொள்ளுகிறது.

கூர்ந்த நோக்குடையவன் எதையும் தெளிவாக ஓர்ந்து கொள்ளுகிறான். உள்ளம் குவிந்து வரின் உணர்வு நலங்கள் அங்கே வெள்ளமாய்ச் சுரந்து விரைந்து வருகின்றன.

தொட்டனைத்து ஊறும் மணற்கேணி; மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு. (குறள் 396)

கல்வியறிவு பெருகி வரும் நிலையை ஓர் உவமையால் தேவர் இங்ஙனம் காட்டியிருக்கிறார். மணலைத் தோண்டிய அளவு நீர் பெருகி வரும்; அதுபோல் மனிதர் கற்ற அளவு அறிவு மருவிவரும். மணல் உவமை உணர்வு நிலையமாயுளது.

ஆற்று மணலுள் நீர் நிறைந்திருந்தாலும் அதனைத் தோண்டிய அளவுக்கே அது சுரந்து தோன்றும்; தோண்டவில்லையானால் அது தோன்றாது. மாந்தர் அகத்தே அறிவு மருவியிருந்தாலும் கற்ற அளவே அது தெளிவாய் வெளி வருகின்றது; கல்லாது விடின் அது காணாது மறைகின்றது. நீரும் அறிவும் சீரோடு ஈண்டு நேரே தெரிய வந்தன.

மணலைப் பறிக்கப் பறிக்க நீர் ஊறி வருதல்போல் நூல்களைப் படிக்கப் படிக்க அறிவு தேறி வரும்; தேறலும் ஊறலும் ஒரு சேர இங்கே தேர்ந்து சிந்திக்க நேர்ந்தன.

அறிவுக்கு நீரை உவமை கூறியது அதன் தன்மையும் நன்மையும் கருதி. நீர்மையும் சீர்மையும் உடையது நீரோடு நேர்மையாய் உணர வந்தது. உள்ளப் பெருக்கை உணர்ந்து கொள்ள வெள்ளப் பெருக்கு நேரே நின்றது. தோண்டச் சுரக்கும் நீர்; வேண்டச் சுரக்கும் விளைவு; கற்கச் சுரக்கும் அறிவு; கறக்கச் சுரக்கும் பால்; புரக்கச் சுரக்கும் புகழ்.

மணல் கேணி மனிதன் உள்ளத்திற்கும், நீர் அறிவுக்கும் தோண்டல் கற்றலுக்கும், ஊறல் அறிவின் தேறலுக்

கும் ஒப்பாம். எல்லையில்லாத கல்வி யறிவு மனிதன் உள்ளத்தில் நிறைந்துள்ளது; அதனை அவன் அறிந்துகொள்ளவேண்டும். வெளியே யிருந்து யாதும் புதிதாய் வருவது இல்லை; எல்லா அறிவு நலங்களும் மனிதனுடையஉள்ளத்திலிருந்தே உதய மாகின்றன. இதயம் விரிய உதயம் ஒளி வீசுகிறது.

வெளியே மணலைத் தோண்டினல் தண்ணீர் வரும்; தாகம் தீரும்; உள்ளே மனதைத் தோண்டினல் நல்ல அறிவு வரும்; எல்லா இன்ப நலன்களும் அதனல் அடையலாகும்.இம்மை மறுமைகளை அது செம்மையா அருளுகிறது.

படித்தல் பயிலல் கற்றல் என்னும் வினைக்குறிப்புகளால் கல்வியின் வடிவமும் வண்ணமும் வளமையும் அறியலாகும். படித்தவன் என்பதினும் கற்றவன் என்பது உயர்ந்த மதிப்பு உடையது; கல்வியின் நிலை கருதத் தக்கது.

கருத்தை ஊன்றிக் கூர்ந்து கற்பதே கல்வியைவிரைந்து தேர்ந்து கொள்வதற்குச் சிறந்த வழியாம். கருத்து ஊன்ருத படிப்பு விருத்தி யடையாது; வெறுமையே அடையும்.

கருத்தோடு கூர்ந்து நோக்குபவன் ஒரு நிமிடத்தில் அடையும் அறிவைக் கருதாமல் படிப்பவன் ஒருநாள் ஆனுலும் அடைய முடியாது. அடைவதை ஆய்ந்து கொள்ளுக.

கூரிய நோக்கு சீரிய மேன்மைகளை ஆக்கிக்கொள்கிறது. பழக்கமும் பயிற்சியும் கூர்மையாய்த் தோய்ந்துவரின் சீர்மையான கல்வியறிவுகள் செழித்து வருகின்றன. கலையறிவைப் பெறப் பலமுறைகள் இருப்பினும் உலையாத பயிற்சியே தலைமையாய்ச் சிறந்து தகைமை சுரந்துள்ளது.

“சிலநாள் பழகின் சிலவும் பலியா;
பலநாள் பழகின் பலிக்கும் என்க;
விரைவால் பார்க்கின் தெரியாது ஒன்றும்
விரையாது ஏற்கின் கருகாது என்க;
வருவதில் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததில் சிந்தையைச் சிந்தாது இறக்குக;
நூலினை மீளவும் நோக்க வேண்டா
சூத்திரம் பலகால் பார்க்கவே துணிக;
மாரிபோல் கொடுப்பினும் மந்தனை விட்டுக்
கூறிய னுடனே கொடுத்தும் பழகுக;
வேறொரு கருமத் தினைமனத்து எண்ணின்
ஆரியன் ஆயினும் அப்பொழுது ஒழிக;
சொற்பயில் விப்பவன் எப்படிச் சொற்றனன்
அப்படி ஒழுகி அரும்பொருள் பெறுக.”
(இலக்கணக்கொத்து)

கல்வி பயிலும் மாணவர்கள் கருதி உணர வேண்டிய சில கருவிகளை இது காட்டியுள்ளது. எதையும் கருத்து ஊன்றிக் கூர்ந்து பார்; விரைந்து செல்லாமல் ஆழ்ந்து கவனி; மேலும் மேலும் படித்துக்கொண்டே போகாமல் படித்த பாடங்களை அமைதியாக ஆராய்ந்து சிந்தனை செய்; முக்கியமான கவிகளை மனனம் செய்துகொள்; கூர்மையான அறிவாளிகளோடு கூடிப் பழகு; மனதை நியமமாகவும் நிம்மதியாகவும் வைத்துக்கொள்; ஆசிரியன் குறித்தப்படி கூர்ந்து படி; அவன் பிரியம் உறும்படி பேணி நட என இவ்வாறு உரிமையான உணர்வு நலங்கள் இங்கே காண வந்துள்ளன.

உண்ட உணவு சீரணமானால் இரத்தம்விருத்தியாய் அது உடலுக்கு உறுதி தருகிறது; கல்வியால் கண்ட கருத்து உள்ளத்தோடு நன்கு தோய்ந்து கொண்டால் அது உணர்

வுக்கு உறுதியாய் ஒளிபுரிகின்றது. சிந்தையுள் செரியாதது நிந்தையில் செறிந்து நிலையைக் குலைத்து விடுகிறது.

"To read without reflecting like eating without digesting" [Burke]

"சிந்தனை செய்து நன்கு உணராமல் கற்பது பசியாமல் உண்பது போலாம்" என்னும் இது இங்கே அறிய வுரியது.

உரிய கல்வியை இளமையிலிருந்தே பிரியமாய்ப்பயின்று கொள்ள வேண்டும்; அந்தப் பருவத்தைத் தவற விட்டால் பின்பு பெரிய துபரமாம். செல்வத்திலும் கல்வி ஈட்டம் கருத்து மிகவுடையது; மனிதனுக்குத் தனி உரிமையானது.

தான் முயன்று தேடாமல்சோம்பேறியாயிருந்தாலும் தந்தை ஈட்டிய பொருள் மைந்தனுக்கு வந்து சேரும்; கல்வி அவ்வாறு வருவதில்லை; தான் சொந்தமாக வருந்தித்தேடிய பொழுதுதான் ஒருவன் அதனை அடைந்து கொள்ளமுடியும். ஆகவே மனிதன் அதனை எவ்வாறு விரைந்து பெறவேண்டும் என்பது விளங்கி நின்றது. கல்விப்பேறு செல்வ வரவினும் வேறுபாடு உடையது; நல்லநெறிமுறைகளோடு அமைந்தது; வேகமாகவும் விவேகமாகவும் அது பெற உரியது.

செல்வம் வழிமுறையில் சேர்ந்துவரும்; கல்வியோ
புல்விப் பயின்ருர்க்கே போதுமால்---ஒல்லையினில்
ஓதி உயர்க ஒழிந்தாயேல் நீஎன்றும்
பேதையாய் நிற்பாய் பிறழ்ந்து. (தருதீபிகை,552)

செல்வம் வமிச பரம்பரையாக வந்து சேரும்; கல்வி அவ்வாறு வராது; அதனை விழைந்து பயின்றவர்க்கே அது விளைந்து வரும்; ஆதலால் விரைந்து படித்து உயர்ந்து கொள்க; அயர்ந்து நின்றுயேல் நீ என்றும் மூடனும்

இழிந்து உழலுவாய்! என இது உணர்த்தியுள்ளது. உண்மை நிலையை ஊன்றி ஈண்டு நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

மனித வாழ்க்கைக்குச் செல்வமும் கல்வியும் உரிய துணைகளாயினும் முன்னதினும் பின்னது தனிமைப் பேருய்த் தலைசிறந்துள்ளது. செல்வம் பிதிரார்ச்சிதமாப் பெறலாம் ஆதலால் அது இழிந்த பேருய் இசைந்து நின்றது. அயல்தர வருதலால் அது மயல் தந்து மரியாதையைப் பறித்து ஒரு மானக் கேடாய் மருவியுளது. தான் ஈட்டியதே தன்னுடையதாம்; பிறன் தந்தது எவ்வழியும் பிழைபாடு உடையதே.

கல்வி சுயார்ச்சிதமாய் வருதலால் இது புனிதமான இனிய பேருய் அரிய நீர்மைகளை விளக்கிப் பெரிய மகிமைகளோடு பெருகி மிளிர்கிறது. ஞான சம்பத்து மான சம்பத்தாய் மருவியுள்ளமையால் வானமும் வையமும் இதனை வாழ்த்தி வருகின்றன. புனித வரவு புண்ணியப் பேருய்ப் பொங்கி யாண்டும் கண்ணியங்களை அருளி மிளிர்கிறது.

"Learning by study must be won,
It was never entailed from son to son." (Gray)

"கல்வியைப் பரம்பரை உரிமையாக எவனும் பெற முடியாது; தனது சொந்தப் பயிற்சியினலேயே ஒருவனிடம் அது வந்து சேர்கிறது" என்னும் இது இங்கே சிந்திக்கத் தக்கது. கல்விப் பேற்றின் மாட்சி காட்சிக்கு வந்துளது.

தன் முயற்சியால் அடைய வுரிய இனிய கல்வியை மனிதன் அடையானுயின் அவன் நெடிய மடையன் ஆகின்ருன்; வறியனுயிருப்பதைவிட மடையனுயிருப்பது கொடிய இழிவாம். அந்த ஈன இழிவில் மான மனிதன் இழிந்து படலாகாது; ஞானமுடையனுய் உயர்ந்து நலம்பல பெறவேண்டும். கல்வி ஒன்ருல் எல்லா மேன்மைகளும் எதிர்வருகின்றன.

கல்லாத மனிதனுடைய இயற்கை அறிவு கட்டுக் கடை நீராய் மட்டுப் பட்டுள்ளது; கல்வியறிவு கலந்தால் ஊற்று நீராய் அது ஓங்கி எழுகின்றது. ஒளியும் சுவையும் பெருகி எவ்வழியும் விழுமிய நிலையில் அது விளங்கி வருகின்றது.

எண்ணங்கள் எவ்வளவுக்கு எவ்வளவு உயர்கின்றனவோ அவ்வளவுக்கு அவ்வளவு அந்த மனிதன் உயர்கின்றான். உயர்ச்சி நிலை ஊன்றிய உள்ளப் பயிற்சியால் அமைகின்றது. நல்ல சிந்தனைகளால் மனிதன் உயர்ந்து நலம் பல பெறுகிறான். மேலோர்களுடைய உயர்ந்த எண்ணங்களே சிறந்த நூல்களாய் வந்துள்ளமையால் அவற்றோடு பழகி வரின் விழுமிய மேன்மைகள் எங்கும் பெருகி வருகின்றன.

கல்வி மனிதனை ஒளி நிறைந்த உயர்ந்த மணி ஆக உயர்த்தியருளுகிறது; கல்லாமை அவனை இழிந்த கல்லாகத் தாழ்த்தி யாண்டும் பொல்லாங்கை விளைத்து விடுகின்றது.

கல்லாதான் கல்லாய்க் கழிந்திழிந்தான்; கற்றவனோ
எல்லொளி வீசி எழில்மிகுந்து---நல்ல
மணியாய் உயர்ந்தான்; மதிகெட்டு நின்றான்
பிணியாய் இழிந்தான் பிறழ்ந்து.

கல்வி கல்லாமைகளால் மனிதர் அடையும் உயர்வு தாழ்வுகளை இது உணர்த்தி யுளது. கற்றவன் நல்ல ஒளி மணி; கல்லாதவன் பொல்லாத கல் என்றது நிலைமைகளை நினைந்து தெளிய வந்தது. உள்ளே நல்ல அறிவு பெருகியதால் கல்விமான் வெளியே மதிப்பாய் ஒளிமிகப் பெற்றான். அறிவு அருகிப் போனமையால் கல்லாதவன் சிறுமையாய் மறுகி யிழிந்தான். உயிர் ஒளி மழுங்கினமையால் உயர்வு ஒழிய நேர்ந்தது. கல்வியை இழந்தபோது அல்லல்கள் அடர்கின்றன.

நந்தன் என்னும் உழவன் பெருஞ் செல்வன்; அவன் ஒருநாள் ஒரு பெரியவரைக் கண்டான்; உரிமையுடன் வணங்கினன். அவர் அறிவுரைகள் கூறினர். பின்பு அவனது குடும்ப நிலைகளை விசாரித்தார்; மகனுடைய படிப்பைக் குறித்துக் கேட்டார். "பையன் படிக்க வில்லை; இரண்டு எருமைகள் உள்ளன; அவற்றை மேய்த்துக் கொண்டிருக்கிறன்" என்று அவ் வுழவன் உரைத்தான். அவ் வுரையைக் கேட்டதும் அப் பெரியவர் உள்ளம் வருந்தினர்: "மாட்டு மகனே!" என்று மறுகி இரங்கினர்; மீட்டும் அவனைப் பரிந்து பார்த்தார்: "அப்பா! இரண்டு என்று இனி யாரிடமும்சொல்லாதே; உனக்கு மூன்று எருமைகள் இருக்கின்றன; நீ பெரிய பாக்கியவான்; போய் வா!" என்று வாய்மொழிந்தருளினர். அந்த வார்த்தை அவனுக்கு விழியைத் திறந்து வழியைக் காட்டியது. படியாமல் இருத்தலால் தன் மகனை எருமை மாடு என்று அப் பெரியவர் குறிப்பாக இகழ்ந்து உரைத்தார் என அவன் அறிந்து கொண்டான். மறுநாளே பையனைப் பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைத்தான். சில காலத்துள் அவன் நன்கு படித்துத் தேர்ந்தான். சிறந்த அறிவாளியா யிருந்தமையால் அரசாங்கத்தில் ஓர் உயர்ந்த பதவியும் கிடைத்தது. கல்வியறிவாலும் அதிகாரத்தாலும் நல்ல மதிப்பை அடைந்து அவன் எங்கும் செல்வாக்குடையனுய்ச் சிறந்து வந்தான். தன் மகன் கற்று மேன்மையுற்றுள்ளதை நினைந்து நினைந்து பெற்ற தந்தை பெரு மகிழ்ச்சி அடைந்தான். அவன் கல்வியாளனுய் உயர்ந்து வருதற்கு நேர்ந்த காரணத்தை ஒரு நாள் அம் மைந்தனிடம் தந்தை உரைத்தான். அவ் வுரையைக் கேட்டு அவன் உள்ளம வியந்தான்; தன் நிலைமையை நினைந்து நெஞ்சம் திகைத்துநெடிது களித்தான். உடனே அதிகார முறையில் ஓர் உயர்ந்த

குதிரையில் ஏறி அப் பெரியவரிடம் வந்தான்; அவருடைய அடியில் நெடிது விழுந்து பணிந்துஎழுந்தான்; தொழுதுநின்ருன்; பெரியவர் திகைத்து "நீங்கள் யார்?" என்று மிகுந்த மரியாதையோடு வியந்து கேட்டார். அவன் தகுந்தபடி பதில் சொன்னுன்: "ஒரு இழிந்த எருமைக்குச் சிறந்த அரச பதவி தந்து அதனை உயர்ந்த குதிரையில் இவர்ந்து வரும்படி செய்த பெரிய தரும மூர்த்தியே! உங்கள் பாத ஊழியன் நான்" என்று அவன் பரிவோடு உருகி உரைத்ததைக் கேட்டதும் அப் பெரியவர் முதலில் திகைத்தார்; பின்பு விவரம் தெரிந்து வியந்து புகழ்ந்து உவந்து உபசரித்தார். அவன் விடை பெற்று மீண்டான். அவருடைய பெயரை வேத மந்திரமாக ஓதி என்றும் நன்றியறிவோடுஅவன் நன்கு பேணிவந்தான்.

கல்லாமல் இழிந்து பொல்லாத மிருகங்களாய்ப் போய்த் தொலைபாதீர்கள்; கற்று உயர்ந்து கொள்ளுங்கள் என உலகத்தவர்க்கு ஓர் உறுதியான போதனையாய் அவனது வாழ்க்கை வரலாறு அதிசயமா மருவி வந்துள்ளது.

கல்வியை இழந்தபோது ஒளி இழந்த கண்போல் மனிதன் பழியடைந்து நிற்கின்ருன்; அதனை அடைந்தபொழுது தெளிவு அமைந்து சீர்மை நிறைந்து சிறந்து திகழ்கின்ருன்.

ஒரு பிறவியில் கற்ற கல்வி என்றும் பிரியாமல் வரு பிறவிகள்தோறும் தொடர்ந்து தோய்ந்து அரிய பல உறுதி நலங்களை அவனுக்கு உரிமையோடு நன்கு அருளி வருகிறது.

எடுத்துள்ள இந்தப் பிறவியில் ஒரு மனிதன் படித்து வருகிருன்; உள்ளம் ஓர்ந்து கற்ற அந்தக் கல்வியறிவு உயிருள் சாரமாய்ச் சேர்ந்து கொள்கிறது; அவ்வுணர்வின் புணர்வு மலரின் மணம்போல் மருவி நிற்றலால் பிறவிகள் தோறும் பிரியாமல் குணகுணியாய்க் குலாவி மிளிர்கிறது.

ஒரு இளைஞன் அதி விரைவில் எதையும் விழைந்து அறிந்து கொள்கிறான்; மற்றொரு பையன் யாதும் ஏறாமல் மந்தனாய் மடிந்து நிற்கின்றான். அ என்னும் ஒரு எழுத்தை அறிந்து கொள்ளவே இவனுக்கு ஆறுமாதங்கள் ஆகின்றன. காரணம் என்ன? முன்னவன் முன்னமே படித்து வந்த வாசனை யுடையவன்; பின்னவன் படியாமல் மூடமாய் நின்றவன். ஆகவே அந்தத் தொடர்பும் நிலையும் தொடர்ந்து வந்துள்ளன. பிறவிவாசனைகள் என்றும் உறவுரிமையுடையன.

விட்ட குறை; தொட்ட குறை எனச் சுட்டி வரும்பழமொழிகள் இந் நிலைமைகளை விழிதெரிய விளக்கி யுள்ளன.

ஒரு முறை கற்றது பின்பு அவனுக்கு உரமாய் உறுதி நலங்களை உதவி வருதலால் கல்வி என்றும் எவ்வழியும் அழியாத விழுமிய துணை என வியந்து புகழ வந்தது.

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து. (குறள். 398)

ஒரு பிறப்பில் ஒருவன் கற்ற கல்வி ஏழு பிறவிகளிலும் தொடர்ந்து அவனுக்குச் சேமமாய் இன்ப நலங்களை அருளி வரும் என வள்ளுவ தேவர் இங்ஙனம் குறித்துள்ளார். ஏழு என்று வரம்பு செய்து உரைத்தது உயிர் வாசனையின் எல்லையை நோக்கி வந்தது; ஆயினும் எல்லையில்லாத நிலையில் கல்வி உரிமையாய் உறுதி புரிந்து வரும் என்பது மருமமாய் மருவி நின்றது. யாண்டும் அழியாதது ஈண்டுஅறிய வந்தது.

இத்தகைய அற்புதத் திருவை இழந்திருப்பின் மனிதனுக்கு அது எத்தகைய இழிவாம்? எவ்வளவு பழியாம்? எத்துணைக் கேடாம்? இதனை நன்கு உய்த்துணர வேண்டும்.

ஒருவன் கல்லாது கழிந்து நிற்பான் ஆயின் அவன் இழிந்து படுவதோடு அவனுடைய சந்ததிகளும் கல்விநலனை இழந்து பட நேர்கின்றன. தான் கல்லாமல் நிற்பவன் தன் குலத்துக்கே கொடிய பொல்லாங்கைச் செய்தவன் ஆகின்றான். மூட இருள் படிந்துவரத் தன்வழி முறைக்கு அவன் பழியான கேடு புரிந்து வருகிறான் ஆதலால் கல்லாது நின்றவன் பொல்லாத ஒரு கேடனாப் புலை யடைய நேர்ந்தான்.

படிப்பு வாசனை அற்ற குடியில் பின்பு அது பற்றுவது மிகவும் அரிதாம். படியாதது அடியோடு படியாமல் போகின்றது. போகவே அக்குடும்பம் விலங்கின் கூட்டமாய் இழிந்து யாதொரு நலனும் காணாமல் நாசமே அடைகின்றது. அறிவு நலம் விலகியது அவல நிலையில் அழிகிறது.

கல்வியறிவுடைய முதிய வேதியன் ஒருவன் ஒருநாள் ஓர் ஆற்றில் தவறி விழுந்துவிட்டான். வெள்ளம் அவனை ஈர்த்துக்கொண்டு போயது. நதியின் நீர்ப்பெருக்கில் சிக்கித் தத்தளித்துத் தவித்து உயிருக்கு மன்றாடி அவன் துயரோடு சென்றான். அப்பொழுது அயலே கரைமேல் ஆடுகளை மேய்த்துக்கொண்டு நின்ற ஒருவன் அவனது நிலையைக் கண்டான். விரைந்து நீரில் பாய்ந்து நீந்திப்போய் அந்த மறையவனைப் பிடித்துக் கரையில் கொண்டுவந்து சேர்த்தான். ஆற்றித் தேற்றினான். சிறிது ஆறுதல் அடைந்த அவன் பெரிதும் ஆர்வத்தோடு அந்த மேய்ப்பனைப் பார்த்து "அப்பா! எனக்கு நீ உயிர் உதவிபுரிந்து என்னைக் காப்பாற்றினாய்! உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?" என்று நன்றியறிவோடு நயந்து கூறினான். நீங்கள் யார்? எந்த ஊர்? எங்கே போகிறீர்கள்!" என்று அவன் கேட்டான். "நான் கொஞ்சம் படித்திருக்கிறேன்; உபாத்தியா

யர் வேலை பார்த்துள்ளேன்; ஆற்றுக்கு அப்பாலே யிருக்கும் ஊரில் போய்ப் பள்ளிக்கூடம் வைத்துப் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிக்கலாம் என்று வந்தேன்; இடையே இந்த ஆபத்து நேர்ந்தது” என்று அம்முதியவன் மொழிந்தான். அப்படியானால் என் வீட்டில் வந்திருந்து என் பையனுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுங்கள் என்று அவன் விரும்பி வேண்டினான். அப்பொழுது அந்த இருவருக்கும் இடையே முறையாக நடந்த உரையாடல்கள் அயலே வருகின்றன.

வேதியன்:- நீ என்ன படித்திருக்கிறாய்?

மேய்ப்பன்:- நான் ஒன்றும் படிக்கவில்லை.

வேதியன்:- ஏன் படியாமல் நின்றாய்?

மேய்ப்பன்:- என்னைப் படிக்க வைக்கவில்லை.

வேதியன்:- உன் தந்தை படித்திருக்கிறாரா?

மேய்ப்பன்:- அவரும் படிக்கவில்லை.

வேதியன்:- உன் பாட்டனாராவது படித்துள்ளாரா?

மேய்ப்பன்:- அவருக்கும் படிப்புத் தெரியாது.

வேதியன்:- அப்படியானால் என்னை இந்த ஆற்று வெள்ளத்திலேயே தள்ளி விட்டுவிடு; அதுதான் நல்லது; ஒல்லையில் செய்தருள்.

இந்தச் சொல்லைக் கேட்டதும் அந்த மேய்ப்பன் திகைத்தான். காரணம் தெரியாமல் வியந்து விழித்தான்; ஆடுகளை ஓட்டிக்கொண்டு ஊருக்குப் போம்படி அவனை அம்முதியவன் நயந்து வேண்டினான்; அவ் வேண்டுகோளின் படியே அவன் அயலே இயல்பா நடந்து போனான்.

"கல்வி வாசனை தன் தலைமுறையிலும் இல்லாத ஒருவனுக்குக் கற்பிப்பது மிகவும் கடினம்; அவனுக்குப் படிப்பு ஏறாது; அந்த மடையனுக்குச் சொல்லிக் கொடுப்பது மரண வேதனையினும் கொடிதாம்; அதைவிடச் சாவது நல்லது" என்று அந்தக் கிழவன் கருதிப் போனதை இந்தச் சரிதம் மருமமாய் விளக்கி மானச வுண்மைகளைத் துலக்கியுள்ளது.

மனிதன் கல்வியை இழந்துவிடின் அல்லல்களும் அவமானங்களும் அவனைத் தொடர்ந்துகொள்ளுகின்றன. அவனுடைய வழிமுறையும் பழி படிந்து இழிவடைய நேர்கின்றது. ஒருமுறை நழுவியதால் பலவழியும் அழி துயர்களாம்.

சத்துள்ள நல்ல உணவு உடலை வளர்த்து உறுதி புரிகிறது; சாரமுள்ள இனிய கல்வி உயிரை வளர்த்து அரிய பல உறுதி நலன்களை அருளுகிறது. எவ்வழியும் திவ்விய மகிமைகளை நல்கி வருதலால் கல்வியை இளமையிலிருந்தே கற்றுக் கொள்ளவேண்டும் என்று பெரியோர்கள் எல்லாரும் பரிவோடு கூறியுள்ளனர். பரிவுரைகள் அறிவொளிகளாயுள.

கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே. (1)

கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதர் ஆகும்மே. (2)

நாற்பால் குலத்தில் மேற்பால் ஒருவன்
கற்றில னாயின் கீழ் இருப்பவனே. (3)

எக்குடி பிறப்பினும் யாவரே ஆயினும்
அக்குடியில் கற்றோரை மேல்வரு கென்பர். (4)

அறிவுடைய ஒருவனை அரசனும் விரும்பும். (5)

கல்வி யின் பெருமையையும் கல்லாமையின் சிறுமையை யும் பல வகையிலும் எடுத்துக் காட்டி அதிவீர ராம பாண்டி யன் இவ்வாறு அறிவு கூறியிருக்கிறார். அரசகுலத் தோன்ற லாகிய இந்த மதிமான் மனித குலத்திற்கு மதியூட்டி வழி காட்டி யிருக்கும் முறை உவகையை ஊட்டி வருகிறது.

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்போர் அன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்;
ஒருகுடிப் பிறந்த பல்லோர் உள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே. (புறம், 183)

நெடுஞ் செழியன் என்னும் பாண்டிய மன்னன் கல்வி நலனைக் குறித்து இவ்வண்ணம் பாடியிருக்கிறார் அரிய பொருள்களை வாரிக் கொடுத்தோ, உரிய ஏவல்களைச் செய் தோ, பிரியமுடன் என்ன பாடு பட்டாவது மக்கள் படித் துக்கொள்ளவேண்டும் என்று இம் மன்னன் இப்படி வடித் துச் சொல்லி யிருப்பது ஈண்டு நுனித்து நோக்கத் தக்கது.

கைப்பொருள் கொடுத்தும் கற்றல்!
கற்றபின் கண்ணும் ஆகும்;
மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையும் ஆகும்.
பொய்ப்பொருள் பிறகள்; பொன்னும்
புகழுமாம் துணைவி ஆக்கும்;

இப்பொருள் எய்தி நின்றீர்!
இரங்குவது என்னை? என்றான்.
(சீவகசிந்தாமணி)

கல்வியினால் உண்டாகிற பலவகை நன்மைகளையும் எடுத்து விளக்கிச் சீவக மன்னன் இவ்வாறு உரைத்திருக்கிறான். கல்வி நிலையை அவன் கருதி யிருப்பது காண வந்தது.

குடிசனங்கள் யாவரும் கற்றவர்களா யிருந்தால் நாடு சிறந்து விளங்கும்; தங்கள் ஆட்சியும் அமைதியாய் இனிது நடைபெறும்; ஆதலால் அரசர்கள் யாண்டும் கல்வியை இவ்வண்ணம் விழைந்து பேணிப் புகழ்ந்து போற்றி எல்லாரிடையும் நல்ல அறிவை நன்கு பரப்பி வந்துள்ளனர்.

கல்லாத மக்களை யுடைய நாடுகள் பொல்லாத காடுகளாய்ப் புன்மை அடைந்திருக்கும் ஆதலால் நாடு ஆளநேர்ந்தவர் எவரும் தம் குடிகளிடம் கல்வியைப் பல வகையிலும் பரப்பி நன்மை செய்ய நேர்ந்தனர். சிறந்த ஆட்சிக்கு அடையாளம் அந்நாட்டு மக்கள் எல்லாரும் கற்றவராயிருக்கும் காட்சியே யாம். அது குறையின் யாவும் குறையே.

தன்பால் வாழும் மக்கள் யாவரும் கல்விமான்களாய்ச் சிறந்து பண்பாடு அமைந்திருப்பின் அந்த நாடு இன்ப நிலையமாய் எங்கும் நன்கு மதிக்கப்படுகிறது. தற்காலத்தில் நமது நாடு கல்வியில் மிகவும் தாழ்ந்து தளர்ந்திருக்கிறது.

அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மன், பிரான்ஸ், ஜப்பான், ரஷ்யா முதலிய தேசங்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றுநான்குபேர் நன்கு படித்திருக்கின்றனர். ஞான பூமி என்று பெருமை பெற்றுள்ள நம் இந்தியாவில் நூற்றுக்குப் பதினைந்து பேரே படித்துள்ளனர். மற்றை எண்

பத்தைந்து பேர்களும் படியாதவர் என்னும் பட்டங்களைத் தாங்கி நெடிதோங்கி நிற்கின்றனர். உவமானமே இல்லாத இந்த அவமானம் இந்த நாட்டிலிருந்து என்று நீங்குமோ அன்று தான் நன்மையும் மதிப்பும் நன்கு காண முடியும்.

எழுத்தை அறிந்து கொள்ளுவது ஓரளவு கல்வியேயாயினும் உள்ளத்தைப் பண்படுத்தி நன்மையாளராய் ஒழுகி வருவதுதான் உண்மையான கல்வி யாம். இந்தப் பண்பாடு பரம்பரை வாசனையாய்ச் சிறிது மருவி வருதலினாலேதான் படியாதிருந்தாலும் இந்நாட்டு மக்கள் காட்டு மாக்களாய் இழிந்து போகாமல் மனிதராகவே மானமுடன் வாழ்ந்து வருகின்றனர். நாடு தெய்வாதீனமாய்ச் சுதந்திரம் அடைந்துள்ளது. தலைமையாய் நின்று ஆட்சிபுரிபவர் கல்வியை எங்கும் பரப்பி நிலைமையை உயர்த்தி மாட்சி புரிய வேண்டும். குடிமக்களும் மடிமண்டி யிராமல் படிப்பில் துடிப்பாய் நெடிது ஓங்கி நீர்மைகளில் உயர்ந்து நெறியே வரவேண்டும்.

பிறந்த ஒவ்வொரு மனிதனும் கல்வியைப் பயின்று கொள்ளுவதே தன் சிறந்த கடமையாகக் கருதிவரின் அது உயர்ந்த நன்மையாய் உறுதிநலங்களை நேரே அருளி வரும்.

கல்வி அறிவின் சுவையாய் அமைந்தது; ஆன்ம போகமாயுள்ளது. வயிற்றுப் பிழைப்புக்காக அதைக் கற்பதில்லை. பிழைக்கும் வழி என்று பிழையாக நாடிக் கற்பது எவ்வழியும் இழிவாம். கல்வி யறிவால் மனிதன் உயர்ந்த போது அதனால் எல்லா நன்மைகளும் தானாக வந்து சேருகின்றன.

அறிவின் உயர்வை நாடி உயர்ந்த குறிக்கோளோடு கல்வியைக் கற்க வேண்டும். பொருளைத் தேடலாம் என்று இழிந்த நோக்கோடு அதைக் கற்கலாகாது. அரிய மாணிக்-

-கத்தைச் சிறிய விலையில் விற்றுவிடுவது பெரிய பேதைமை யாம். உரிய மேன்மையை உணர்ந்து பேண வேண்டும்.

"Education is not a profitable business, but a costly one." (Ruskin)

"கல்வி ஊதியமான ஒரு காரியம் அன்று; அரிய விலையுடைய பெரிய பொருள்" என ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் கல்வியின் பெருமையை இங்ஙனம் கூறியிருக்கிறார்.

கல்வி மனிதனைப் புனிதனாக உயர்த்தி மகிமை தருவது; அதன் ஒளியின் ஒரு துளியால் அரிய பல செல்வங்களை எளிதே பெறலாம். அத்தகைய அற்புதத் திருவை அற்ப நிலையில் தாழ்த்தி விடுவது எப்பொழுதும் அவலமே யாம்.

"You do not learn that you may live;
you live that you may learn." [Ruskin]

"உன் வாழ்க்கையை நடத்தலாம் என்று நீ படிக்கலாகாது; படிக்க வேண்டும் என்றே நீ உயிர் வாழ வேண்டும்" என்னும் இந்த உறுதி மொழியை ஈண்டு ஊன்றி உணர்ந்து உண்மை நிலையை ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

உயிரின் ஒளியான கல்வியை உயர் நிலையில் உரிமையோடு கற்றுக்கொள்வதே பெரிய மகிமையாம். தெய்வத்தை வழி படுவதுபோல் கல்வியையும் பரிசுத்த மான நிலையில் பயபத்தியுடன் பயின்று உயர்ந்து கொள்ள வேண்டும்.

ஆண்டவனை வணங்கும் போதே எனக்கு அது வேண்டும்; இது வேண்டும் என்று சிறு பொருள்களை வேண்டித் தொழுவது விபரீத மான இழிவாம். கல்வியைப் பயிலும் போதே புல்லிய பொருள்களை அவாவி யுழல்வது புலையாம்.

இக் காலத்துப் படிப்பு முறை இந்நாட்டு மக்களுக்கு நலம் தராமல் நவைகளையே ஊட்டி வருகிறது; இதனைக் கல்வி என்று சொல்லலாகாது; படிப்பு என்று ஓரளவு நடிப்பாகச் சொல்லலாம். வேண்டாத படிப்புகள் எல்லாம் பிள்ளைகளுடைய உள்ளங்களில்புகுந்து அல்லல்களை விளைத்து வருகின்றன. ஒருவகையிலும் தேர்ச்சியின்றிப் பலவழிகளிலும் அவர் தாழ்ச்சியடைந்துள்ளனர். வாயளவில் எதையும் பற்றித் துடுக்காகப் பேசுவதே மிடுக்கான படிப்பாக அவர் கருதிக் களித்து வருகின்றனர். உறுதியாக ஒன்றும் தெரியாமல் மறுகி மயங்கி எங்கும் வறிதே உழலுகின்றனர்.

"The child becomes a talker in all, but a master in none." [Goldsmith]

"பையன் எதையும் பற்றிப் பேசத் தெரிந்தான்; ஆனால் ஒன்றும் நன்றாகத் தெரியாது" என்னும் இது இங்கே அறியவுரியது. இலக்கியம், கணக்கு, பூகோளம் முதலிய பலவகைப் படிப்புகளைப் பிள்ளைகளிடம் திணித்து வருதலால் அவர் திரிந்து வருவதைக் குறித்துக் கோல்டுஸ்மித்து என்பவர் இங்ஙனம் விநயமாக இகழ்ந்திருக்கிறார். இகழ்ச்சிக் குறிப்பில் உணர்ச்சி உவகைகள் உறைந்திருக்கின்றன.

மேல் நாட்டுப் படிப்பு உலக வாழ்க்கையோடு ஒட்டியது; அதையே இப்படி அந்த அறிஞர் கிண்டல் செய்திருக்கிறார். இந்நாட்டுக் கல்வி உயர்ந்த பண்பாடு அமைந்தது; மேன்மையான ஆன்ம நோக்கமுடையது. கல்விக்குப் பயன் ஒழுக்கம் என்று கருதி யுணர்ந்து உறுதி பூண்டு வருவது.

கற்க கசடு அற;
நிற்க அதற்குத் தக. (குறள், 391)

கல்வி கற்கும் முறையையும், அங்ஙனம் கற்றவன் ஒழுகி வரவேண்டிய நிலையையும் தேவர் இங்ஙனம் உணர்த்தியிருக்கிறார். கல், நில் என் ஏவலால் குறியாமல் வியங்கோள் மொழியால் மரியாதையாக உரைத்தது மதித்து உணர வுரியது. கல்வியைத் தொடங்கும் போதே மனிதன் நல்ல மதிப்பு அடையத் தொடங்கிக் கொள்கிறான். கண் அனைய கல்வியைப் பெற விரும்பிய பொழுதே எண்ணரிய செல்வங்களை எய்திக் கண்ணியவானாய் உயர்கின்றான்.

பல நூல்களையும் தெளிவாகக் கற்று மனிதன் சீலம் உடையனாய் ஒழுகி வரவேண்டும். அவ்வாறு வரின் அவன் விழுமிய மேன்மையாளனாய் உயர்ந்து மேலான கதிநலங்களை அடைய நேர்கின்றான். கல்வியால் உள்ளம் ஒளிபெறுகிறது; உணர்வு பெருகி வருகிறது; வரவே அளவிடலரிய மேன்மைகள் அதனால் வெள்ளமாய் விளைந்து வருகின்றன.

கல்வி இன்னவாறு நலம் பல புரிந்து வருதலால் அது தெய்வ நிதி; சிவ அமுதம்; உயிர்த்துணை எனப் புகழ்ந்து போற்றப் பெற்றது. செம்மையும் சீர்மையும் பயந்து இம்மையும் மறுமையும் இன்புறுத்தியருளும் கல்வியை ஒருவன் எவ்வளவு அன்புரிமையோடு விரைந்து பெறவேண்டும்! என்பதை ஈண்டு நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாம்உணராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. (நாலடியார், 132)

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்---உறுங்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை. (நீதிநெறி, 2)

கற்பக் கழிமடம் அஃகும்; மடம் அஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகின் கோளுணரும்; கோளுணர்ந்தால்
தத்துவ மான நெறிபடரும் அந்நெறி
இப்பால் உலகத்து இசைநிறீஇ உப்பால்
உயர்ந்த உலகம் புகும். (நான்மணி, 29)

எப்பிறப் பாயினும் ஏமாப்பு ஒருவற்கு
மக்கட் பிறப்பிற் பிறிதில்லை---அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின். (அறநெறிச்சாரம், 142)

ஆற்றவும் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை; அந்நாடு
வேற்றுநாடு ஆகா தமவேயாம்; ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில். (பழமொழி, 55)

தாய்போல் இனிதோம்பும் தந்தைபோல் நன்காற்றும்
தூய மனைபோல் சுகம்அருளும்---ஆயநலம்
எல்லாம் அருளி இதம் அளிக்கும் கல்வியிது
வல்லார்க்கு எவைதாம் வரா. (தருமதீபிகை, 559)

கல்வியின் அருமை பெருமைகளையும், மாந்தருக்கு அது செய்து வருகிற உறுதி நலங்களையும் இவை உணர்த்தியுள்ளன. வாழ்வைச் செம்மைப்படுத்திப் பான்மைகளை உயர்த்திப் பலவகையிலும் மேன்மைகளை விளைத்து வருதலால் கல்வி மனிதனுக்குத் தெய்வத் திருவாய்ச் சிறந்து நின்று எவ்வழியும் இன்பம் சுரந்து உய்வைப் புரிந்தருளுகிறது.

"நிலையினில் சலியா நிலைமை யானும்
பலவுலகு எடுத்த ஒருதிறத் தானும்
நிறையும் பொறையும் பெறுநிலை யானும்
தேவர் மூவரும் காவ லானும்
5. தமனியப் பராரைச் சைலம் ஆகியும்,

அளக்கவென்று அமையாப் பரப்பின தானும்
அமுதமும் திருவும் உதவுத லானும்
பலதுறை முகத்தொடு பயிலுத லானும்
முள்ளுடைக் கோட்டு முனைஎறி சுறவம்
அதிர்வளை தடியும் அளக்கர் ஆகியும்,
நிறையுளம் கருதி நிகழ்ந்தவை நிகழ்பவை
தருதலின் வானத் தருஐந்து ஆகியும்,
மறைவெளிப் படுத்தலின் கலைமகள் இருத்தலின்
அகமலர் வாழ்தனின் பிரமன் ஆகியும்,
உயிர்பரிந்து அளித்தலின் புலமிசை போக்கலின்
படிமுழுது அளந்த நெடியோன் ஆகியும்,
இறுதியில் சலியாது இருத்த லானும்
மறுமைதந்து உதவும் இருமை யானும்
பெண்ணிடம் கலந்த புண்ணியன் ஆகியும்,
அருள்வழி காட்டலின் இருவிழி ஆகியும்,
கொள்ளுநர் கொள்ளக் குறையாது ஆதலின்
நிறையுளம் நீங்காது உறையருள் ஆகியும்,
அவைமுத லாகி இருவினை கெடுக்கும்
புண்ணியக் கல்வி." (கல்லாடம், 13)

மேருமலை, கடல், கற்பகதரு, பிரமன், திருமால், சிவபெருமான், கண், அருள் என்னும் இந்த அருமைப் பொருள்களோடு சிலேடையாக நேர்வைத்து ஒப்பு உரைத்துக் கல்வியின் பெருமையைக் கல்லாடர் இவ்வாறு உல்லாச வினோதமாக உரைத்திருக்கிறார். இதில் குறித்துள்ள பொருள்நிலைகளையும், உவமை நயங்களையும், அழகுகளையும் கூர்ந்து ஓர்ந்துகொள்ள வேண்டும். அறிவின் சுவைகள் இங்கே பெருகியுள்ளன. உரிமையாய் உணரின் உவகைகள் வருகின்றன.

மனித சமுதாயத்தைத் தனிநிலையில் உயர்த்திக் கல்வி பெருமகிமை செய்து வருதலால் அதனைப் பல வகையிலும்

புகழ்ந்து துதித்து மேலோர் போற்றி வரலாயினர். துதி மொழிகள் எல்லாம் அதன் அதிசய நீர்மைகளைத் துலக்கி வந்தன. அதனுடைய சுவைகளைக் கவிகள் சுகித்துள்ளனர்.

அயோத்தி நகரம் கோசலா தேசத்தின் இராசதானி யாயிருந்தது. அரிய பல வளங்கள் நிறைந்து எழில் ஒளிகள் மிகுந்து விழுமிய நிலையில் அது விளங்கி நின்றது. தனது காவிய நாயகனுகிய இராமன் அவதரித்திருந்த அந்நகரைக் குறித்துக் கம்பர் உவந்து கூறியிருக்கிறார். கலையின் சுவை சுரந்து வந்துள்ள அந்த இனிய கவி அயலே வருகின்றது.

ஏகம் முதற் கல்வி முளைத்து எழுந்து எண்ணில் கேள்வி
ஆகம் முதல் திண்பணை போக்கி அருந்தவத்தின்
சாகம் தழைத்து அன்பு அரும்பித் தருமம் மலர்ந்து
போகம் கனிஒன்று பழுத்தது போலும் அன்றே.

(இராமா, நகர, 75)

புனிதமான இனிய பேரின்பங்கள் நிறைந்து ஒரு புதிய போக பூமிபோல் திருவயோத்தி பொலிந்திருந்தது என்று சொல்ல வந்த கவிஞர் பெருமான் இவ்வாறு சொல்லி யிருக்கிறார். பொன்கள் இழைத்து, மணிகள் அழுத்தி, அணிகள் குயிற்றி எவ்வழியும் அழகுகள் ஒழுகச் செய்த பெரிய மாட மாளிகைகள் யாண்டும் நீண்டு நிறைந்து மிளிர அந்நகரம் விளங்கி யிருந்தது என்று பாட வேண்டிய இடத்தில் இப்பாட்டு இப்படிக் கிளைத்து இனிது வந்துளது.

அதிசயமான ஓர் இன்ப வுலகமாய் அந்நகர் இருந்தது என்பதை இங்ஙனம் வருணித்திருக்கிறார். வருணனை அற்புத மான ஒரு தருவின் உருவில் மருவி வந்துள்ளது. கல்வி கேள்வி தவம் அன்பு தருமம் போகம் என்னும் அருமை நலன்கள் பெருமித நிலைகளில் பெருகி இங்கே கருத வந்தன.

எல்லா இன்ப நலங்களும் புண்ணியத்தால் உளவாகின்றன. தன் உயிரைப் புனிதமாகப் பேணிப் பிறர் உயிர்கள் பால் அன்பு புரிந்து வருதலால் புண்ணியம் விளைகின்றது. இவ்வாறான உண்மைகளை யெல்லாம் உணர்ந்து கொள்ள மூலகாரணமாயிருப்பது கல்வியே ஆதலால் அது புண்ணிய போகங்கள் எவற்றிற்கும் வித்து என வந்தது. வித்து இல்லை எனின் மரம் இல்லை; மரம் இல்லையானால் இலை தழை மலர் கனி யாவும் இலவாம். கல்வி இல்லையேல் யாதொரு பலனும் இல்லை; எல்லாம் பாழாம் என்பது இங்கே கருதி யுணர வந்தது. இந்த உருவக நிலையைத் துருவிநோக்கி உறுதியுண்மைகளைக் கூர்ந்து ஓர்ந்து ஊன்றி உணர்ந்து கொள்ளவேண்டும்.

கல்வி மனிதனை மதிமான் ஆக்கி அரிய பல பண்பாடுகளை அருளுகிறது; அதனால் எவ்வழியும் சிறந்த இன்ப வாழ்வுடையனாய் அவன் உயர்ந்து விளங்குகின்றான்.

தன்னைச் செப்பப் படுத்தித் தனது வாழ்க்கையை ஒழுங்காக நடத்தி எவ்வழியும் செவ்வையாய் உயர்ந்து வருகின்றவனே கல்வியின் பயனை விரைந்து பெற்றவனாகின்றான்.

"Education is the ability to meet life's situations."
(Hibben)

"வாழ்க்கை நிலைகளை நல்ல வகையில் ஒழுங்குபடுத்தி நடத்தும் வல்லமையே கல்வியாம்" என ஜாண் ஹிபன் என்பவர் இவ்வாறு கல்வியின் நிலையைக் குறித்திருக்கிறார்.

"The great aim of education is not knowledge but action"
(Herbert Spencer)

"கல்வியின் முக்கிய குறிக்கோள் அறிவு அன்று: நல்ல நடத்தையே" என ஹெர்பர்ட் ஸ்பென்சர் என்பவர் இங்ஙனம் உரைத்துள்ளார். உரைக் குறிப்புகள் உணரத் தக்கன.

செயலில் உயர்வடைந்த போதுதான் கல்வி பயனுடையதாகின்றது. மனத்தைப் பண்படுத்தித் தன் வாழ்க்கையை மாண்பு செய்து வருபவனே மேன்மையான கல்விமானாகின்றான். பூரண மனிதன் ஆதற்குக் கல்வி காரணமா யுள்ளது.

## பெண் கல்வி.

ஆண்களைப் போலவே பெண்களுக்கும் கல்வி பெருமகிமை தருகின்றது. பெண் கல்வி இந்நாட்டில் பண்டு உயர்ந்த நிலையில் சிறந்து வந்துளது. கலையில் பயிற்சியும் அந் நிலையில் உயர்ச்சியும் அவர்களிடம் ஒருங்கே அமைந்து வாழ்க்கையைப் பெருந்தகைமையா ஆக்கி யிருக்கின்றன.

பெருந்தடங்கட் பிறைநுத லார்க் கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே?

(இராமா, நாட்டு, 36)

கோசலா தேசத்துப் பெண்களிடம் கல்வியும் செல்வமும் நிறைந்திருந்த நிலையும், அவர்வாழ்க்கையைநடத்திவந்த வகையும் இப்பாட்டில் காட்டப்பட்டுள்ளன. கல்வியறிவும் செல்வ வளமும் செறிந்து இருந்தமையால் வருந்தி வந்தவர் எவர்க்கும் திருந்திய அன்போடு அன்னம் அளித்துப்பெருந் தகவோடு பொருளுதவி புரிந்து அருள் அறங்களைப் பேணிச் சிறந்த நிலையில்அவர்உவந்து வாழ்ந்து வந்துள்ளனர்.தம்மை உரிமையாக வுடையவரை மகிமைப் படுத்தி மணம் பெறச் செய்து புகழ் வாசனையை எங்கும் பரப்பி இன்பக் காட்சியாய் இனிது மலர்ந்திருந்தன ஆதலால் கல்வியும் செல்வமும் பூத்தன என்று புதுமை தோன்ற வுரைத்தார். கல்வி கற்பதும், செல்வம் பெறுவதும் எதற்காக? தாம் நல்லவராய் உயர்ந்து பிறர்க்கு நலம் பல புரியவே என்பதை அந்த

நல்லார் வாழ்க்கை எல்லார்க்கும் இங்கே நன்கு காட்டியுளது. தாய்மைக் கல்வி வாய்மையாய்த் தூய்மை தருகிறது.

பெண்கள் கல்வி கற்பதால் இவ்வாறு பல பண்பாடுகள் வளர்ந்து வருகின்றன. நல்ல மக்கள் எங்கும் நன்கு தோன்றிக் குடித்தனமும் படித்தலும் உயர விளங்கி வரும் ஆதலால் அவரது கல்வி நிலையும் பயனும் இங்கு வியனுற அறிய வந்தன. மாதர் கல்வியால் மகிமைகள் விளைகின்றன.

"Women should receive a higher education, not in order to become doctors, lawyers, or professors, but to rear their offspring to be valuable human beings."

(Alexis Carrel)

"பெண்கள் உயர்தரமான கல்வி கற்க வேண்டும்; அங்ஙனம் கற்பது வக்கில், வைத்தியர், உபாத்தியாயர் முதலிய உத்தியோகங்களுக்கு அல்ல; தங்கள் சந்ததிகளைக் கண்ணியமான மேன்மக்களாக வளர்த்து வரவேயாம்" என அலெக்ஸிஸ் காரல் என்னும் பிரஞ்சு தேசத்துப் பேரறிஞர் இவ்வாறு கூறியிருக்கிறார். பெண்கள் கல்வி எந்த நாட்டிலும் என்ன நோக்கத்தோடு இருக்க வேண்டும் என முன்னோர் எண்ணி மொழிந்துள்ள உண்மைகள் ஈண்டு உன்னியுணர நேர்ந்தன. வேறு எந்நாட்டிலும் இந்நாட்டுக் கல்வி உயர்ந்த குறிக்கோளையுடையது. சீலம் தோய்ந்தது; சீர்மை வாய்ந்தது; மேலான நீர்மையாய் ஆன்ம நேர்மையையே அவாவியுள்ளது.

"The end of all education should be man-making."

"எல்லாக் கல்வியின் முடிவும் உண்மையான மனிதனை உண்டாக்க வேண்டும் என்பதே" எனக் கல்வியின் வியனான பயனைக் குறித்து விவேகானந்தர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். ஒருவன் கற்றுவரும் கல்வி அவனை உத்தமனாக

உயர்த்த வேண்டும்; அந்த உயர்வைச் செய்த போதுதான் அது நல்ல கல்வி ஆகின்றது. கற்றவனும் பெற்றவனாகிறான்.

**The poorest education that teaches self-control, is better than the best that neglects it. [Anon]**

மன அடக்கத்தைத் தராத உயர்ந்த கல்வியினும் அதனை அருளி உள்ளத்தைப் பண்படுத்துவதே சிறிதா யிருந்தாலும்பெரிய சிறந்த கல்வியாம் என்னும் இது இங்கு நன்கு அறியவுரியது.

கல்வியால் மேலான அறிவு நலங்களை மனிதன் அடைகின்றான்; அதனால் உரிமையோடு அறிய வேண்டியதை அறிந்து பெரிய பேரின்ப நிலையைப் பெறுகின்றான்.

கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்று ஈண்டு வாரா நெறி. (குறள்,356)

பிறவி நீங்கிப் பேரின்ப நிலையைப் பெறுவதே கல்வியின் முடிவான பயன் எனத் தேவர் இங்ஙனம் முடித்திருக்கிறார். பிறவி எவ்வளவு உயர்வுடையதாயினும் எவ்வழியும் அது துயருடையதே; அதனை நீங்கித் தனது உண்மை நிலையை அடைந்து கொள்வதே ஒருவன் உய்தி பெற்றபடியாம். அப்பேற்றைப் பெறுதற்குக் கல்வி பெருந்துணையாயுள்ளது. உயிர் துயர் நீங்கி உயர்வா உய்ய உதவுவது உணர வந்தது.

கல்வி என்றால் என்ன?
செல்வத்தினும் அது எதனால் சிறந்தது?
மனிதனுக்கும் அதற்கும் உள்ள உறவுரிமை யாது?
அதனைப் பயின்று பெறவேண்டிய முறைகள் எவை?
அதன் முடிவான பயன் எது?

இந்த வினாக்களுக்கு உரிய விடைகளை ஈண்டு மீண்டும் ஆராய்ந்து ஓர்ந்து சிந்தனை செய்து கொள்ள வேண்டும்.

# நான்காவது அதிகாரம்.

## கவி.

---

உயர்ந்த எண்ணங்கள் சிறந்த மொழிகளில் பண்ணமைதி தோய்ந்து சுவை சுரந்து வருவன கவிகள் என நின்றன. பேச்சாலும் எழுத்தாலும் தன் கருத்தைப் பிறர்க்கு உணர்த்தும் திறம் மனிதனிடம் மருவியிருக்கிறது; வாய் வார்த்தை தோன்றிய அளவே மறைந்துபோகிறது; எழுத்து நிலைத்து நிற்கிறது. வசனம் கவி என எழுந்து இருவகை நிலையில் மருவியுளது. வசன வடிவினும் செய்யுள் உருவில் அமைந்தனவே சிறந்தனவாகும். அரிய பல பொருள்களை மருவி இனிய சுவைகள் பெருகி வரும் இயல்புகள் இதன்பால் தனியுரிமையாய் இனிது இசைந்திருக்கின்றன.

சீர், தளை, எதுகை, மோனை, அடி, தொடை முதலிய உறுப்புக்கள் பொருந்தித் திருந்திய பண்போடு வரம்பு அமைந்து வருதலால் கவி என்றும் சிறந்த மதிப்போடு உயர்ந்து விளங்குகிறது. அழகும் இனிமையும் அருமையும் பெருமையும் இதில் எவ்வழியும் செவ்வையாய் மருவியுள்ளன.

சொல்லிலும் பொருளிலும் சுவைகள் சுரந்து உணர்வு நலம் கனிந்து மிளிர்தலால் கவிகள் உவகை நிலையமாய் ஓங்கி ஒளிர்கின்றன. இளமை நலம் கனிந்த அழகிய உருவில் புனிதமான இனிய உயிர் மருவியிருத்தல் போல் செவ்விய மொழிகளில் திவ்வியமான கருத்துக்கள் செறிந்து நிற்கின்றன. அத்தகைய கவிகள் உயர்ந்த உத்தம மணிகளாய் ஒளி புரிந்து தெளிவமைந்து உவகை சுரந்து வருகின்றன.

பாட்டு, செய்யுள், தூக்கு, தொடை, பனுவல் எனக் கவிக்குப் பெயர்கள் அமைந்திருக்கின்றன. யாவும் காரணக் குறிகளாய் இசைந்து சீர்மை தோய்ந்து வந்துள்ளன.

பல கலைகளையும் பயின்று தலைமையான புலமைவாய்ந்த கவிஞன் உலகம் நலமுற அறிவு நலங்களை மொழிகளில் இனிது அமைத்து உரிமையோடு உதவி யருளுகிறான். அவை கவிகளாய் உவகை புரிந்து வருகின்றன. அவற்றின் சுவைகள் உயிரினங்களுக்கு உயர் நிலைகளை அருளுகின்றன.

கவனத்தால் கவிந்து பிறந்தது கவி எனவந்தது. தரும நீதிகள் தோய்ந்து இனிய சுவைகள் பாய்ந்து வருவது பா என நின்றது. நாம அமைதிகள் நேம நியதிகளுடையன.

பாடப்படுவது பாட்டு; செப்பப்படுவது செய்யுள்; தூக்கி நிறுத்து ஆக்கி அருள்வது தூக்கு. மதிமாண்பு நிறைந்த மானச விளைவுகள் ஞான போகங்களாய் நன்கு அமைந்து அதி மேன்மைகளை எங்கும் அருளி மனிதசமுதாயத்துக்கு ஆதரவுகள் புரிகின்றன. அதன் பயனும் பண்பும் நயனும் நண்பும் கலை யுலகில் நிலை யுயர்ந்து திகழ்கின்றன.

தன் கண் எதிரே தோன்றிய பொருள்களை மாத்திரம் மனிதன் காணுகின்றான். காணாதன பல கோடிகள் உள்ளன; அளவிடலரியபடி விரிந்து பரந்து மறைந்துபோயுள்ள அவற்றுள் சிறந்தனவற்றை வரைந்து கொண்டுவந்து கவிகள் அழகாகக் காட்டியருள்கின்றன; அக்காட்சிகள் அரிய பல மாட்சிகளை அருளியாண்டும் உறுதிபுரிந்து வருகின்றன.

மனித சமுதாயத்தைப் புனிதப்படுத்தி உன்னத நிலையில் உய்ப்பதே உத்தம கவிகளின் நோக்கமாய் உரிமை மீதூர்ந்துள்ளன. மனிதன் இன்பத்தை விரும்புகிறான்;

துன்பத்தை அஞ்சுகிறான்; விரும்பியன பலவும் விலகிப் போகின்றன; வேண்டாதன பல விரைந்து எதிர் வருகின்றன. அல்லல் அவலங்களிலேயே அலமந்துழலுகின்ற மனிதனுக்கு நல்ல உறுதி நலங்களைக் காட்டிக் கவிகள் இதம் புரிந்தருளுகின்றன. அதன் உதவி நிலைகள் எவ்வழியும் செவ்விய காட்சிகளாய்ச் சிறந்து சீர்மை சுரந்து திகழ்கின்றன.

உலக நிலைகளையும் உறுதி உண்மைகளையும் தெளிவாகக் காட்டும் ஓர் அற்புதக் கண்ணாடி போல் கவிகள் பொற்பமைந்துள்ளன. கால தேசங்களால் சேய்மைப்பட்டு மறைந்துபோயுள்ள மனிதர்களையும் பொருள்களையும் புனித போதனைகளையும் நேரே கொண்டுவந்து காட்டி உவகைகளை ஊட்டி அவை உதவி வருவன அதிசய விபப்புகளாய்த் துதிகொண்டுள்ளன. உருவப்படத்தினும் கவிப்படம் மிகவும் சிறந்தது; அதில் ஒருவனது உடல் நிலையை மட்டும் குறிப்பாக் காணலாம். இதில் மனிதனுடைய உருவம் பருவம் குணம் செயல் நடை உடை பழக்கம் வழக்கம் பான்மை மேன்மை முதலிய அனைத்தையும் தெளிவாகக் கண்டு விழி எதிரே நாம் உடனிருந்தவர்போல் உளம் மிக மகிழ்கின்றோம். புவியில் நேரே காணாத எவரையும் நாம் கவியில் கண்டு களிக்கின்றோம். அது காட்டிய படியே நம்மை ஆட்டி வசப்படுத்திக் கொள்ளுகின்றது. கவி ஒரு வீரனைக் கொண்டுவந்து காட்டுங்கால் நமக்கு வீர வுணர்ச்சியை ஊட்டி விடுகிறது; வள்ளலைக் காட்டி உள்ளத்தை உருகச் செய்கிறது; ஒரு நீதிமானை நேர் நிறுத்தி நீதியைப் போதித்து நிலையை உயர்த்துகிறது. தருமம் சத்தியம் கருணை வீரம் மானம் நேர்மை வன்மை திண்மை முதலிய நீர்மைகளை யெல்லாம் சீர்மையோடு உணர்த்தி நம்மைச் சிறந்த மேன்மையில் நிறுத்துகிறது. அதன் செயலும் இயலும் திவ்விய நிலையில் மிளிர்கின்றன.

பேசும் மொழியில் அமைந்த கவிகள் பேசாமல்இருந்து கொண்டே நம்மைப் பலவகையிலும் ஆட்டிவருவது அதிசய வியப்பை ஊட்டி வருகிறது. கவிகளைக் கருத்தூன்றிப் படிக்குங்கால் நம்மை அறியாமலே நாம் சிரிக்கின்றோம்; வியக்கின்றோம்; வீறு கொள்கின்றோம்; சீறி எழுகின்றோம்; மாறி மருள்கின்றோம்; அழுகின்றோம்; அளி புரிகின்றோம்; களிமிகுகின்றோம்; அருளுறுகின்றோம்; அன்பு கனிகின்றோம்; இன்பம் நுகர்கின்றோம்; வீராவேசமாய் ஆரவாரம் செய்கின்றோம்; இன்னவாறே கவிகள் என்ன என்ன விதமாகவோ நம் உள்ளங்களைக் கவர்ந்து உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பி உயிர்களைப் பரவசப்படுத்தி உயர்த்தி விடுகின்றன.

அறிவின் சுவையாய் அமைந்து ஆனந்தம் அருளி வருதலால் கவிகள் மனித மரபுக்கு எவ்வளவு திவ்விய நலங்களைச் செய்து வருகின்றன! எத்துணை உய்தி முறைகளைப் புரிந்து அருள்கின்றன! என்பது உய்த்து உணரத் தக்கன.

உயர்ந்த நெறி முறைகளை உணர்ந்து சிறந்த நிலையில் மனிதர் வாழ வேண்டிய வகைகளையே கவிகள் சுவையாக உணர்த்தி வருகின்றன. ஆகவே அதன் நிலைமையும் தலைமையும் உரிமையும் உதவியும் ஓர்ந்து கூர்ந்து சிந்திக்க வந்தன.

"Poetry is a representation of the ideal." [Newman]

"கவி உயர்ந்த வாழ்க்கை நிலையின் சிறந்த காட்சி" என நியூமன் என்பவர் இவ்வாறு குறித்திருக்கிறார். அந்த மானசக் காட்சியில் ஞான சீலங்கள் மருவி மிளிர்தலால் பெரிய மேன்மைகள் பெருகி எவ்வழியும் இனிமை புரிந்து வருகின்றன.

சிறந்த அறிவு நலங்களை ஊட்டி மனித வாழ்வை மகிமைப்படுத்தி வருதலால் கவி உயர்ந்த தெய்வத்திருவாணா

வந்தது. அதனோடு உரிமையாய்ப் பழகி வருபவர் அரியபல இன்ப நிலைகளை அடைந்து மகிழ்கின்றார். உலகிற்கு முன் மாதிரியாய் ஒருவன் உயர்ந்து வரவேண்டின் அவன் கலை ஞானத்தோடு கவியின் சுவைகளையும் நுகர்ந்து வரவேண் டும். கவிகள் அரிய பல காட்சிகளைக் காட்டியருள்கின்றன.

கண்காணு மாந்தரையும் காணுத வேந்தரையும்
விண்கா ணரிய விதங்களையும்---மண்காணு
மாட்சி களையும் மதிமுன் இனிதாகக்
காட்சி யருளும் கவி."

இன்னவாறு பல அதிசயக் காட்சிகளைக் காட்டி மனிதனுக்கு இன்ப நலங்களை ஊட்டிக் கவிகள் யாண்டும் இதம் புரிந்து வருகின்றன. கருதிக் காணுந்தோறும் அரிய சுவைகளை யருளிப் பெரிய இன்பங்களை விளைத்து வருகிற இனிய சிவ அமுதங்கள் என மேலோர்கள் இவற்றை வியந்து புகழ்ந்திருக்கின்றனர். வியப்பு நிலைகள் உவப்பில் வந்தன.

பயிர்களுக்கு நீர்போல் உயிர்களுக்குக் கவிகள் உறுதி புரிந்து வருதலால் சிவ நதிகள் என இவை மேவியுள்ளன. இராமன் வனவாசம் செய்ய நேர்ந்த போது பல மலைகளையும் வனங்களையும் கடந்து தென்திசை அடைந்து கோதாவரி நதியை வந்து கண்டான். அந்த வீரமூர்த்தி நேரே கண்ட அந்நதியைக் குறித்து வந்துள்ள கவி அயலே வருகின்றது.

**புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் ருகி**
**அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவிச்**
**சவியுறத் தெளிந்து தண்என்று ஒழுக்கமும் தழுவிச் சான்றோர்**
**கவிஎனக் கிடந்த கோதா வரியினை வீரா கண்டார்.**

**(இராமா, ஆரணிய, சூர்ப்ப 1)**

அன்று இராமலட்சுமணர் அங்கே கண்டு நின்ற கோதாவரி நதியை இப்பாட்டு நமக்கு "இங்கே இப்படிக் கொண்டு வந்து காட்டியிருக்கிறது. காட்சியைக் கருத்து ஊன்றி நோக்குகின்ற அளவு பொருளின் சுவைகள் பெருகி வருகின்றன. அரிய பல உண்மைகள் தெரிய நேர்கின்றன.

கவிக்கும் நதிக்கும் உள்ள ஒப்புமைகளை நுட்பமாக உணர்த்திச் சிலேடை அணி தோய்ந்து இது வந்துள்ளது. கவியின் நீர்மை சீர்மைகளை யெல்லாம் ஒருங்கே பெய்து வைத்து அதி மதுரமாக இக்கவியை ஆக்கியருளியுள்ள கவிஞர் பெருமானை அறிவுலகம் திசை நோக்கித் தொழுது வருகிறது. கவியின் நீர்மையைக் கூர்மையாக் காணவருகிறோம்.

உலகினுக்கு அணியாய் அமைந்தது; நிறைந்த பொருள்களைத் தருவது; சிறந்த அறிவு நலங்களை யுடையது; அகம் புறம் என்னும் இனிய துறைகள் வாய்ந்தது; முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை ஆகிய ஐந்துவகை நிலங்களின் நிலைகளைத் தழுவி அரிய பல வாழ்வுகளை உணர்த்துவது; எங்கும் நன்கு தெளிந்தது; யாண்டும் இனிமையான நீர்மைகள் தோய்ந்தது; எவ்வழியும் நீதி நெறிகள் பெருகி ஒழுக்க சீலங்கள் மருவி விழுப்பமா யுள்ளது. எனச் சான்றோர் கவியின் சால்புகளை இக்கவி இங்ஙனம் காட்டியுள்ளது. உயர்ந்தோர் கவியில் அமைந்துள்ள இந்த இயல்புகள் எல்லாம் அந்த நதியிலும் பொருந்தி நலங்கள் பல சுரந்து பலன்கள் நிறைந்திருந்தமையால் அதற்கு இது உவமையாயது.

என்றும் வற்றாமல் யாண்டும் நீர்மை நிறைந்து சீர்மையோடு பாய்கின்ற உயர்ந்த தெய்வீகமான சிவ நதியாய்க் கவிகள் மேவியுள்ள உண்மை ஈண்டு ஊன்றி உணரவந்தது. நதி நீர் இடங்கள்தோறும் பரந்து பாய்ந்து எங்கும் இனிய

நீர்மையாய் இதம்புரிந்து பயிர்களை வளர்த்தருளுகிறது;அத ஞல் உயிர்கள் உவந்து வாழ்ந்து வர உலகம் செழித்து வரு கிறது. உலகத்தைப் புரந்து வருதலால் சிவநதியாய்நின்றது.

சான்ருேர் கவி மன்பதை எங்கும் இன்புற மருவி அன்பு அறிவு அமைதி முதலிய பண்புகளை வளர்த்து உயிர் களை உன்னதநிலையில் உயர்த்தி வருகிறது. நதி உலகை ஓம்பி உறுதி புரிகிறது; கவி யுயிர்களை ஓம்பி உயர்வு தருகிறது.

புற உலகிற்கு நீர் எப்படியோ அப்படியே அறிவுல கிற்குக் கவி அமைந்திருக்கிறது. நீர் ஓட்டம் இன்றேல் உலக ஓட்டம் இன்ரும்; அது ஓட உலகம் ஓடி வருகிறது. அதுபோல் கவி ஒழுக்கு உயிர் ஒழுக்குக் காரணமாயுள் ளது; சிவகோடிகளுக்குச் சிவ நதி போல் கவி மேவியுள்ள மையால் அதன் நீர்மையும் சீர்மையும் நிலைமையும் தலைமை யும் நேரே கூர்மையாக நாம் உணர்ந்து கொள்ளலாம்.

கோதாவரி நதிக்குக் கவியைக் கம்பர் உவமை கூறியது போல் வைகை நதிக்குக் கல்லாடரும் சொல்லியிருக்கிருர். கவியின் நிலையைக் கவிஞர் சுவையாக் காட்டுகின்ருர்.

"நிறையுடைக் கல்வி பெறுமதி மாந்தர்
ஈன்றசெங் கவிஎனத் தோன்றி நனிபரந்து
பாரிடை இன்பம் நீளிடைப் பயக்கும்
பெருநீர் வையை வளைநீர்க் கூடல்
உடலுயிர் என்ன உறைதரு நாயகன்." (கல்லாடம்,2)

கவியினது இயல்பையும், அதனை ஆக்கியருளும் கவிஞ ரது உயர்வையும் இது காட்டியுளது. உடலில் உயிர்போல் மதுரையில் சோமசுந்தரக் கடவுள் உறைந்திருக்கிருர். அந் தத் திவ்விய பதிக்கு வையை நதி செவ்விய கவிபோல் நீர்மை சுரந்து சீர்மை புரிந்துள்ளது எனக் கவி குறித்தி ருக்கும் குறிப்பு இங்கே கூர்ந்து ஓர்ந்து சிந்திக்க வுரியது.

கவியின் நுகர்வால் புவி உயர் நலன்களை அடைந்து வருகிறது. அந்த வரவு நிலை நதி நீர்களோடு கலந்து மதி தெளிய வந்தது. சிவ அமுதங்கள் சேர்ந்து விளங்கின.

அறிவுக்கு விருந்தான கவி யுணவு இல்லையேல் புவியினர் இருகால் விலங்குகளாய் இழிந்துபட நேர்வர். அங்ஙனம் ஈனம் அடையாதபடி மானிடங்களுக்கு ஞான நலன்களை அருளி வான அமுதமாக் கவிகள் இனிது பேணிவருகின்றன.

கவியில் ஒரு தெய்வீக சத்தி அமைந்திருக்கிறது. தன்னைக் கருதி நோக்குவார்க்கு அரிய பல உறுதி நலங்களை அருளி அவரை அது எவ்வழியும் பெரியராக்கி விடுகிறது.

"Poetry is indeed something divine". (Lowell)

"கவி உண்மையாகவே தெய்வீகம் உடையது" என்னும் இது இங்கே ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்ள வுரியது.

இழிந்த உலோகங்களை உயர்ந்த பொன் ஆக்கும் இரச குளிகைபோல் கவி அதிசய ஆற்றலை மருவியுளது. உலகக் காட்சியில் ஒளி குன்றி எளியனவாய்க் கிடப்பன கவி வசப் பட்டு வெளிவரும் பொழுது ஒளிமிகப் பெற்று உயர்ந்து விளங்குகின்றன. பாவில் படிந்தது பூவில் பொலிந்தது.

இதில் ஒன்றும் இல்லை என்று இயல்பாகவே மனிதர் எள்ளித் தள்ளிவிட்டுப் போகிற பொருள்களைக் கவிகளில் காணுங்கால் அன்பு நலம் கனிந்து உவந்து காணுகிறோம்; இன்ப வளம் சுரந்து அழகு மலிந்து விழுமிய நிலையில் விளங்கி நம் உள்ளங்களை அவை கவர்ந்து கொள்ளுகின்றன.

மழைக் காலத்தில் தவளைகள் கத்துவதை எல்லாரும் கேட்டிருக்கிறோம்; அதில் யாதொரு நயமும் தோன்ற வில்லை. இயல்பாகவே யாதும் கருதாமல் இகழ்ந்து போகின்

றோம். அவ்வாறு இகழச்சி நிலையில் கழிந்து போயுள்ள தவளைக் கத்தலைக் கவி கொண்டுவந்து காட்டும்போது வியந்து காண்கின்றோம்; அது ஊட்டும் சுவையை உண்டு உணர்வு மிகுகின்றோம். ஓர்ந்து நுகர்ந்து உள்ளம் களிக்கின்றோம். அதற்குச் சான்றாக அயலே ஒன்று காண வருகின்றோம்.

கல்வியில் திகழ்கணக் காயர் கம்பலைப்
பலவிதச் சிறார்எனப் பகர்வ பல்லரி
செல்லிடத் தல்லதுஒன் றுரைத்தல் செய்கலா
நல்லறி வாளரின் அவிந்த நாவெலாம்.

(இராமா, கார் 114)

இந்தக் கவியைக் கருத்தூன்றி உணர்பவர் சிறந்த ஒரு நீதி போதனையைத் தெரிந்து கொள்கின்றார். புரட்டாசி, ஐப்பசி மாதங்கள் மாரிக்காலம்; அடிக்கடி மழை பெய்யும்; ஏரி, குளம், வாவி முதலியன யாவும் நீர் பெருகி நிற்கும். அந்த நீர் நிலைகளிலிருந்து தவளைகள் கத்தும்; பள்ளிக்கூடங்களில் சிறு பிள்ளைகள் பலபடியாய் இரைந்து படிப்பது போல் அந்த மழைத் தவளைகள் கத்திக் கொண்டிருந்தன; மழை ஓய்ந்து குளிர்காலம் வந்தது; வரவே தவளைகளின் கத்தல்கள் நின்றன; ஏகதேசமாய்ச் சிறிது கத்தி எங்கும் வாயடங்கி யிருந்தன. அந்த இருப்பு சிறந்த மதிமான்களுடைய நிலைமைபோல் நிலவி நின்றது. வேண்டிய இடத்தில் வேண்டிய அளவு விநயமாய்ச் சொல்லிவிட்டு மற்று யாண்டும் வாயடங்கி மௌனமாயிருப்பது நல்ல அறிவாளிகளின் இயல்பாம்; அந்த மேன்மையான அறிவின் நீர்மையைக் கூதிர்காலத்தில் தவளைகள் மேவியிருந்தன; அவை உணர்வின் சுவையாய் ஒளிசெய்து நின்றன என இது உணர்த்தியுளது. குறித்துள்ள உவமையும் பொருள்களும் கூறிய சீரிய கருத்துக்களும் கூர்ந்து ஓர்ந்து ஆய்ந்து தெளியத் தக்கன.

கணக்காயர்—உபாத்தியாயர். கணக்கை ஆய்ந்துவருபவர் என்னும் ஏதுவான் வந்தது. எண்ணும் எழுத்தும் கணக்கு ஆதலால் அவற்றை ஆய்ந்து தெளிந்தவர் என உபாத்தியாயரை இவ்வாறு இங்கே நயமாக் குறித்தருளினர்.

அரி—தவளை. பல் அரி என்றது பலவகை நிலைகளில் உள்ளவையை. உருவம் பருவம் நிறம குலம் முதலியவற்றால் பலதிறப்பட்ட பிள்ளைகள் பள்ளியில் ஒருங்கே கூடியிருந்து பாடங்களைப்படித்து வருதலால் பல்விதச் சிறார் என நின்றார். மூலபாடங்களை ஓலமிடும் முறைவைத்தும் தனித்தனியாகவும் அவர் படித்து வரும் சத்தங்கள் மழைத் தவளைகளின் கத்தல்கள் என நேர்ந்தன. இயற்கை நிலை தெளிய நின்றது.

அறிவு குறைந்த சிறுவர் வரம்பின்றிக் கண்டபடி பிதற்றிப் பேசுவர்; நல்ல அறிவு நிறைந்த பெரியோர் அவ்வாறு பேசார்; சொல்ல வேண்டிய இடத்தில் இனிமையாகவும் தெளிவாகவும் சுருக்கமாகவும் பேசுவர்; வேறு யாண்டும் அமைதியாய் அடங்கி யிருப்பர்; இதனை நீங்கள் கூர்ந்து ஓர்ந்துகொள்ள வேண்டும். பேச்சு பயன் இன்றிப் பெருகி வந்தால் நீவிர் அறிவிலிகளாய் இழிக்கப்படுவீர்; அது பயனுடையதாய் மருவிவரின் பெருமையும் மேன்மையும் உமக்கு உளவாம்; இந்த உண்மையை உணர்ந்து உங்கள் வாழ்க்கையைச் செம்மை செய்து கொள்ளுங்கள் என உலக மக்களுக்கு ஓர் உணர்வு நலனைக் கவி இங்கே சுவையாக உணர்த்தி உரையாடலின் நிலையைநன்குவிளக்கி யிருக்கிறார்.

அரும்பயன் ஆயும் அறிவினர் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். (குறள், 198)

இந்த அருமைத் திருக்குறள் நம் கவிஞர் பிரான் இதயத்துள் புகுந்திருந்து இவ்வாறு இக் காவியக் கவியாய்

ஈண்டு வெளி வந்துள்ளது. வீணாகப் பேச்சுகளை விரியாமல் மனிதன் நாவடங்கி நயமாகப் பேச வேண்டும் என்பதை இவ்வளவு நளினமாகப் பேசி நம் கவி உணர்த்தியிருக்கிறார்.

பயனில் சொல் பாராட்டுவான் பதர் என்று தேவர் வேகமாய் உரைத்தார். இவர் அதி விநயமாக் குறித்துள்ளார். வார்த்தைகளை மிகுதியாப் பேசுவதிலுள்ள வசை இழிவுகளை இருவரும் தகுதியாய் விளக்கிக் காட்டியுள்ளனர்.

"In the multitude of words there wanteth not sin: but he that refraineth his lips is wise." [Bible]

"வாய்வார்த்தைகள் மிகுதியானால் அங்கே பாவம் இல்லாமல் இராது; தன்நாவை அடக்குகிறவன் ஞானவான் ஆகிறான்." எனச் சாலமன் என்னும் நீதிமான் இவ்வாறு சிலமாய்க் கூறி யிருக்கிறார். நாவடக்கம் நலம்பல தருகிறது.

கவியின் நீர்மையையும், பேச்சின் சீர்மையையும் மேலே வந்துள்ள இரண்டு கவிகளாலும் நாம் உணர்ந்து கொள்கிறோம். உரை சுருங்க உணர்வின் சுவை பெருகியது.

தெய்வீகமான அரிய மேதைகளிடமிருந்து இனிய கவிகள் உதயமாகி வந்துள்ளமையால் அவற்றை உரிமையோடு ஊன்றி உணர்கின்றவர் உயர்ந்த அறிவு நலன்களை அடைந்து கொள்ளுகின்றனர். அறிவுநிலை மொழியால் வெளியாகிறது.

நமது தமிழ்மொழியில் விளைந்துள்ள கவிகள் பெரும்பாலும் தரும நீதிகளையே கருதி வந்துள்ளன. மனிதன் இனிய நீர்மையோடு புனிதமாய் வாழ்ந்து உயர் நிலையை அடையவேண்டும் என்றே கவிகள் யாண்டும் உரிமையோடு உணர்த்தி உறுதிநலங்களை இனிது போதித்து வருகின்றன.

மன நலம் மன்னுயிர்க்கு ஆக்கம்; இன நலம்
எல்லாப் புகழும் தரும். (குறள், 457)

ஒரு மனிதன் பெரிய பாக்கியவானுப் அரிய புகழை அடைய வேண்டுமாயின் அவன் இன்னவாறு இருக்கவேண்டும் என இது உணர்த்தியுளது. தன் மனதில் கெட்ட எண்ணங்கள் படியாமல் நல்ல சிந்தனைகளையே நாளும் ஒருவன் பழகிவரின் அவன் நல்ல மனமுடையவனுகின்முன்; அதனுல் எல்லா மேன்மைகளும் அவனுக்கு உளவாகின்றன. மனத்தைப் புனிதமாக்கி நெறியோடு ஒழுகு; நல்லவர்களோடு பழகு; அகமும் புறமும் இவ்வாருயின் புகழும் பொருளும் சுகமும் அறமும் உனக்கு எவ்வழியும் பெருகும் எனக் குறித்திருக்கும் இது கருத்தில் வைக்கவுரியது.

ஈதற்குச் செய்க பொருளை; அறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை;---யாதும்
அருள்புரிந்து சொல்லுக சொல்லை; இம்மூன்றும்
இருளுலகம் சேராத வாறு. திரிகடுகம், 90)

செல்வத்தை ஈட்டு; நல்ல நூல்களைப் படி; யாரிடமும் இனிமையாகப் பேசு என இது உரைத்திருக்கிறது. ஒருவன் முயன்று தேடிய பொருளுக்குப் பயன் ஈதலும் அனுபவித்தலுமே; துய்த்தல் தேகபோகமாய் உடலளவில் நின்றுவிடுகிறது; பிறர்க்கு உதவுவது புண்ணியமாய் அமைந்து தன் உயிர்க்கு உறுதி தருகிறது; ஆதலால் ஈதலைத் தலைமையாக வைத்தார். நூல்களைக் கற்று நெறியோடு ஒழுகித் தருமவானுப் உயர்ந்துகொள்; கடுமையான சொல் கொடுமையை விளைக்கும்; அவ்வாறு பேசாதே; பொருள்பொதிந்த மொழிகளை அருளோடு யாண்டும் பேசுக; இவ்வாறு செய்துவரின் துன்பம் யாதும் சேராது; இன்பமே பெறுவாய் எனப் பயனும் நயனும் தெரிய வுரைத்தார். பொருளை ஈட்டி நூல்களை

நன்கு கற்று, மனிதரோடு இனிது பழகி ஒருவன் வாழ வேண்டிய முறைகளை இக்கவி இங்ஙனம் காட்டி யுள்ளது.

இளமையும் எழிலும் வானத் திடுவிலின் ஈண்டை மாயும்;
வள்மையும் கிளையும் வாரிப் புதியதன் வரவு போலும்;
வெளியிடை விளக்கின் வீயும் ஆயுவும் என்று வீட்டுக்கு
உளபகல் ஊக்கம் செய்வர் உணர்வினுல் பெரிய நீரார்.
(மேரு மந்தரம்)

இளமை செல்வம் முதலியன நிலையில்லாதன; விரைவில் அழிந்து போவன; ஆகவே வாழ்நாள் உள்ளபொழுதே பேரின்ப வீட்டுக்கு உரிய புண்ணிய நலங்களைச் செய்து கொள்ளுக; அதுவே பிறவிப்பேறும் என இது குறித்துளது.

அறிவினுல் பெரிய நீரார் அருவினை கழிய நின்ற
நெறியினைக் குறுகி இன்ப நிறைகடல் அகத்து நின்றூர்;
பொறிஎனும் பெயர ஐவாய்ப் பொங்கழல்அரவின் கண்ணே
வெறிபுலம் கன்றி நின்றூர் வேதனைக் கடலுள் நின்றூர்.
(சீவகசிந்தாமணி)

அறிவுடைய பெரியோர்கள் நெறிமுறையே ஒழுகிப் பிறவி நீங்கிப் பேரின்ப நிலையைப் பெறுகின்றூர்; அவ்வாறு ஒழுகாமல் பொறி வெறிகளில் அழுந்தித் தேக போகங்களையே நச்சி நசையாயிழிந்து திரிந்தவர் முடிவில் கொடிய துன்பக்கடலையே அடைகிறூர் என இது உரைத்திருக்கிறது.

உயிர்கள் நன்மையுறும்படி இவ்வாறு அரிய பல உண்மைகளைக் கவிகள் நயமாப் போதித்து வருகின்றன.உயர்ந்த பெரியோர்களுடைய சரிதங்களை எடுத்துக் காட்டிச் சிறந்த நிலைகளை அடைந்து கொள்ளும்படி ஊக்கத்தை ஊட்டுகின்றன; உறுதி நலங்களை உரிமையோடு இனிது தெரிவிக்கின்றன; ஆயுந்தோறும் சுவைகள் சுரந்து அறிவுக்குஇன்பங்களை

அருளுகின்றன; பொறி வெறிகளில் போகாமல் மனம் நெறி முறையே செல்லும்படி நீதிகளை உணர்த்துகின்றன; எவ் வழியும் திவ்விய மேன்மைகளை எய்தும்படி செவ்விய நீர் மைகளையேசீர்மையோடு தெளிந்து கொள்ளச்செய்கின்றன.

கவியின் நுகர்வு அறிவின் சுவைகளை அருளி வருதலால் அது புனிதமான பேரின்பமாய் யாண்டும் பெருகியுள்ளது.

கவியின் சுவையைக் கருதி நுகரின்
அவியின் சுவையும் அயலாம்---புவியிலுயர்
பொன்னுலக போகம் பொருந்துமே உன்னுள்ளே
இன்னமுதம் தோய்க இனிது.

அறிவின் இனிய அனுபவம் தனியே உன்னி உணர வுரியது.

பொன்னின் சோதி; போதின் பொலிவு; தேனின் தீஞ்சுவை எனச் சீதையின் உருவ அழகைக் குறித்து உரைத்து வந்த கவிஞர்பிரான் முடிவில் செஞ் சொல் கவி இன்பம் என்று சுவையாக முடித்திருக்கிறார். கவி எவ்வளவு மகிமையுடையது! எத்துணை இனிமை வாய்ந்தது! என்பதை இதனால் ஓர்ந்து கூர்ந்து உணர்ந்து கொள்ளுகின்றோம்.

கவி அறிவின் சுவையது.
நெறிமுறை அமைந்தது.
அரிய பல உறுதி நலங்களை அருள்வது.
உயிரின் உயர் போகமா யுள்ளது.
அதனோடு பழகி வருக.
விழுமிய மேன்மைகள் விளைந்து வரும்.

இத்தகைய கவிகளோடு மனித சமுதாயம் இனிது பழகிவரின் அறிவு நலங்கள் பெருகிவரும்; இனிய பண்பாடுகள் உளவாம்; அரிய பல நன்மைகளை அடைந்து கொள்ளலாம்.

# ஐந்தாவது அதிகாரம்

## கவிஞன்

—∘∘✿∘∘—

வாய்மொழி தாய்மொழியாய் வந்துள்ளது. மனிதனிடம் அது தனி உரிமையாய் மருவி யிருக்கிறது; அதனால் அவன் பெருமை மிகப் பெற்றிருக்கிறான். மிருகங்கள் பேச முடியா ஆதலால் அவை இழிந்த பிராணிகளாய் ஒதுங்கி நிற்கின்றன. மக்களின் உயர்வுக்கும் மாக்களின் இழிவுக்கும் மூல காரணமாய் மூண்டு நிற்பதை இங்கே கூர்மையாக ஓர்ந்து நன்கு உணர்ந்து கொள்கிறோம். பெருமையும் சிறுமையும் கரும நிலைகளில் மருமமாய் மருவி யுள்ளன.

எண்ணுவது, பேசுவது, செய்வது என்னும் இந்த மூன்று நிலைகளிலும் ஆன்ற தலைமைகள் அமைந்திருத்தலால் மாந்தர் மேலானவராய் மேவியுள்ளனர். தன் உள்ளம் கருதியதைப் பிறர் அறியச் சொல்லவல்ல தன்மையும் அதனைக் கேட்டு உணரவல்ல வன்மையும் ஒருங்கே அமைந்துள்ள திறம் பெருந்தகைமையாய் நின்றது; அதனால் சீவகோடிகளுள் மனித இனம் யாண்டும் உயர்வாய் ஓங்க நேர்ந்தது.

சொல்லால் உலகாளும் சுந்தரர்களாய் மனிதர் வந்திருக்கின்றனர். உள்ளே எண்ணிய எண்ணங்களை அவ்வண்ணமே நன்கு வார்த்து வெளியே காட்டுதலால் சொல்லுக்கு வார்த்தை என்று ஒரு பெயரும் வந்தது. பேச்சு, மொழி, வார்த்தை, சொல், உரை என்பன வாய்மொழியின் பெயர்களாய் நேர்ந்துள்ளன. நேர்ந்துள்ள வாக்கு வகைகள் நிரையே கூர்ந்து நோக்க வுரியன. வாக்கும் மூக்கும் கண்

ணும் காதும் உணர்வின் கருவிகளாய் ஒளிபுரிந்து மிளிர்கின்றன. அவற்றின் செயல் இயல்கள் வியனிலைகளையுடையன.

பேச்சும் மூச்சும் உயிர் வாழ்வின் காட்சிகளாயுள்ளன. உடலில் உயிர் இருப்பதை மூச்சு காட்டுகிறது. அது அறிவும் ஆற்றலும் உடையது என்பதைப் பேச்சு உணர்த்துகின்றது. ஒருவன் பேசும் பேச்சிலிருந்து அவனுடைய அறிவு நிலை வெளியே தெளிவாய்க் காட்சிக்கு வருகின்றது.

"வாய் உள்ள பிள்ளை பிழைக்கும்" என்பது பழமொழி.

வாய்மொழிக்கும் உயிர் வாழ்வுக்கும் உள்ள உறவுரிமையை இது தெளிவாக விளக்கியுள்ளது. வாய்ப்பேச்சால் மனித இனம் இனிது இயங்கி வருதலால் மொழி வழக்கு ஒளி விளக்கு என உலகம் வழங்க நேர்ந்தது. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்து வகையுள்ளே அகிலமும் தொகையாய் அடங்கி யுள்ளன. இந்த ஐந்தனுள்ளும் ஓசை ஆகாயத்தின் கூறாய் அமைந்திருத்தலால் அது தலைமையான நிலைமையில் நிலவி உலகம் நலமுற உணர்வு அருளியுள்ளது.

ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே! என்று இறைவனை நோக்கி அப்பர் இப்படித் துதித்திருக்கிறார். ஓசையானது ஒலி அளவில் ஓங்கிய பொழுது இசை என நின்றது; அது பொருளோடு பொருந்திய பொழுது மொழி என வந்தது.

இந்த மொழிகளை வழங்கி வருவதனாலேயே மாந்தர் விழுமிய நிலையில் விளங்கி வந்துள்ளனர். மனித இனம் பல் வேறு இடங்களில் பிரிந்திருந்து பலவகை நிலைகளில் வாழ்ந்து வருதலால் அந்த அந்த நாடுகளுக்குத் தக்கபடி மொழிகள் அமைய நேர்ந்தன. "தேசங்கள் தோறும் பாஷைகள் வேறு" என்பது பழமொழியாய் வந்துள்ளது. பாஷை, படிப்பு,

பாட்டு என்னும் சொற்கள் பேசுதல் என்னும் வினைக் குறிப்பால் விளைந்து வந்து விளைவுகளை விளக்கியுள்ளன.

மனித வாழ்க்கைக்கு இனிய உயிராதாரமாயிருப்பது மொழி. அந்த மொழி ஒளியும் உயர்வும் பெற்றிருப்பது அதில் விளைந்துள்ள நூல்களாலேயாம். நூல்களுக்குச் சீவாதாரமாய் அமைந்திருப்பன கவிகள்; கவிகளுக்கு விளை புலமாயுள்ளவர் கவிஞர்களே. ஆகவே கவிஞர் இலரேல் நூல்கள் உளவாகா; நூல்கள் இலவேல் மொழி ஒளி இழந்த விழிபோல் பொலிவிழந்துபோம்; அது பழுதாய்ப் பாழ்படின் மனித வாழ்வு முழுதும் பாழாம். இவ்வுண்மையை இங்கே நன்கு ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

இங்ஙனம் மக்கள் வாழ்க்கைக்கு உயிராதாரமாயுள்ள மொழியை வளம்படுத்தி உணர்வு நலங்களை உதவி எவ்வழியும் விழுமிய நிலையில் அருள்புரிந்து வருகிற தெருளுடையராய்க் கவிஞர் ஒளிமிகுந்து உயர்வடைந்து ஓங்கியுள்ளனர்.

மேகம் மழை பொழிகிறது; சூரியன் ஒளிபுரிகிறன்; பூமி விளை பொருள்களை அருளுகிறது; நதி நீர்களை வழங்கி வருகிறது; அவ்வாறே கவிஞரும் அறிவு நலன்களை உரிமையோடு மனித சமுதாயத்துக்கு இனிது உதவி வருகின்றனர்.

வானும் கதிரும் மதியும் நதியும்நேர்
மானும் கவிஞர் மதி.

என்றதனால் அவரது நிலைமையும் நீர்மையும் அறியலாகும். உயிர்க்கு உறுதியான உணர்வு நலங்களையும் விதி நியமங்களையும் கவிஞர் படைத்தருளுதலால் சிறந்த சிருட்டி கருத்தராய் இவர் விளங்கி நிற்கின்றனர். பிரம சிருட்டியைவிடக் கவி சிருட்டி சிறந்த மகிமையுடையது; அவனுடைய

சிருட்டி ஒரு நிலையின்றி விரைந்து அழிந்து மறைந்துபோகி றது. இவருடைய சிருட்டி என்றும் அழியாமல் நின்று நிலவுகின்றது. திருவள்ளுவப் பெருமான் ஒரு நூலைப் படைத் தருளினர்; திருக்குறள் என்னும் பேரால் அதுஉருக்கொண்டு ஒளிபுரிந்துள்ளது; அது தோன்றி ஏறக்குறைய இரண்டா யிரம் ஆண்டுகள் ஆகின்றன. இன்றும் இளமை ஒளிமிகுந்து வளமை சுரந்து புதுமை பொலிந்து எழில்நலம் விரிந்து கலை மணம் கமழ்ந்து விழுமிய நிலையில் அது விளங்கி நிற்கின் றது. அதன் எதிரே பிரமன் படைத்த உருவங்கள் எவ் வளவோ கோடிகள் அழிந்து போயின; அவ்வளவு அழிவு களையும் நேரே கண்டுகொண்டு யாதும் செவ்வி சிதையாமல் திவ்விய நிலையில் அந்நூல் சிறந்து வருகிறது; பிரம சிருட்டி யில் எழுந்தன செத்தைகளாய்ச் செத்து ஒழிகின்றன. கவி சிருட்டியில் வந்தன நித்திய சத்துகளாய் நிலைத்து வருகின் றன. அவன் படைப்பில் ஆறு சுவைகளே அமைந்தன. இவர் படைப்பில் ஒன்பது சுவைகள் உயர்வாய் நிறைந்தன.

அன்பு அறிவு முதலிய இன்ப நலங்கள் சுரந்து என் றும் குன்றாமல் இனிமை புரிந்து வருதலால் கலையின் சுவை கள் நிலையான பேரின்பமாய் நிலைத்து வருகின்றன. தேக போகிகளாய் நின்று சீவ கோடிகள் தேய்ந்து போகாமல் உணர்வின் சுவைகளை நுகர்ந்து தேவ கோடிகளினும் மேலாக மனிதர் உயர்ந்து விளங்கும்படி கவிஞர் கலை ஞானங்களை அருளித் தலைமை தந்து வருகின்றனர். இவ ரது மதிநலம் மன்னுயிர்க்கு மகிமைகளை அருளி வருகிறது.

விதி நியமங்களை விதித்து உலகத்தை இவர் ஆட்டி வரு வது அதிசய வியப்புகளை ஊட்டி வருகிறது. “புலவன் கட் டியது உலகம்” என்பது பழமொழி. கவிஞர் காட்டிய

நெறிகளையே மனிதர் கண்டு இனிது நடந்து புனிதம்அடைந்துவருகின்றனர். அவ்வரவு பொலிவு மிகுந்து திகழ்கின்றது.

ஞானி, யோகி, தவசி, கவிஞன் என்னும் இவர் உயர்ந்த தீர்க்கதரிசிகளாய் ஒளிபுரிந்து நிற்கின்றார். ஆன்ம போதங்களை அருளி நெறி முறைகளை ஒழுகிக் காட்டி விழுமிய ஒளிகளாய் விளங்கி நிற்றலால் பேரின்ப வீட்டுக்குப் பெரிய வழி காட்டிகளாய் இவர் மருவி யுள்ளனர். தீர்க்கதரிசிகள் மார்க்க சகாயிகள் ஆயினும் ஞான யோகிகள் மோன நிலையில் ஒதுங்கி விடுகின்றனர்; கவிஞர் உலக மக்களோடு உறவாய் உறுதியுண்மைகளை உணர்த்தி எவ்வழியும் செவ்வையாய் இனிது வாழ்ந்து வர உரிமையுடன் உதவிபுரிகின்றனர்.

அரிய தத்துவ ஞானிகளினும் கவிஞர் பெரிய வித்தகக் கலைஞராய் விளங்கி யிருத்தலால் இவருடைய பொருள் மொழிகள் இருள் நீக்கி இன்பம் பயந்து உயிர்களுக்கு உயர் நலங்களை அருளி வருகின்றன. எவரிடமும் காண முடியாத அதிசயமான ஒரு தெய்வீகத் தன்மை கவிஞரிடம் இனிது அமைந்திருக்கிறது. இவர் ஆக்கி அருளிய அறிவொளிகள் அகில வுலகங்களையும் ஆட்டி வருகின்றன. இவருடைய வாயிலிருந்து வந்த மொழிகள் உயர்தரமான நீதிச் சட்டங்களாய் நிலைத்து நிற்கின்றன. உலகத்தை ஆளும் அரசர்களும் இவரது விதி முறைகளுக்குத் தலைவணங்கி வருகின்றனர். உருவில் மனிதராயினும் அரிய மதிநலம் மருவி யிருத்தலால் புலவர் தேவர் எனப் புகழ் பெருகி நின்றனர்.

"தேவர் அனையர் புலவர்."

என விளம்பி நாகனார் இங்ஙனம் விளம்பி யுள்ளார்.

கலை நிலையில் உயர்ந்தவர் புலவர் என நின்றார். தலைமையான அந்தப் புலமையோடு கவிகளைச் சுவையாக ஆக்க

வல்லவர் கவிஞர் என வந்தார். புலவர் தேவரையும், கவிஞர் பிரமனையும் ஒத்தவர் என்றதிலுள்ள நுட்பங்கள் உய்த்துண ரத் தக்கன. புலமை நிறைந்திருந்தாலும் கவிதா சத்தி பலரி டம் அமைவதில்லை. கவித்துவம் தனியான ஒரு தெய்வக் கொடையாய்ச் சிறந்து யாண்டும் மகத்துவம் மிகுந்துள்ளது.

தாம் கருதியபடியே எதையும் படைக்க வல்லவர். எவ் வழியும் திவ்விய நிலையில் சிறந்து செவ்விய நீர்மை சுரந்துள் ளவர். மானிட சிருட்டியில் மகிமை பெற்றுள்ளமையால் கவிஞர் வான சோதிகளாய்வயங்கிஉயர்வாவிளங்கியுள்ளனர்.

"Poets are liberating gods." (Emerson)

"கவிஞர் சுதந்தர தேவதைகள்" என எமர்சன் என் னும் அமெரிக்க அறிஞர் இவ்வாறு குறித்திருக்கிறார்.

கவிஞர் உலகத்திற்குத் தனி உரிமையாளர்; அவர் உரைத்த உரைகள் கால தேசங்களையும் கடந்து மனித சமு தாயத்துக்குப் புனிதமான உறுதி நலங்களை உணர்த்தி வரு கின்றன.உலகம்நலமுறஅவரதுபுலமைபொலிந்துவருகிறது.

தெய்வ நீதியும் அரச நீதியும் கவிஞரது கவிகள் மூல மாகவே காட்சி தருகின்றன. இவருடைய அருள்மொழி கள் நீதி முறைகளாய் நிலவி உலகத்தை யாண்டும் ஆட்சி புரிந்து எவ்வழியும் மாட்சிகள் நீண்டு வருகின்றன.

"Poets are the unacknowledged legislators of the world." (Shelley)

"கவிஞர் உலகிற்குத் தனி உரிமையான நீதி கருத்தர் கள்" என ஷெல்லி என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் குறித்திருக்கிறார். குறிப்புகள் கூர்ந்த சிந்தனை யுடையன.

மனித சமுதாயம் நெறிமுறையோடு இனிது இயங்கி வருப்படி சட்டங்களை நிரூபணம் செய்தருளுகிறவர்கள் எனக் கவிஞரைக் குறித்து மேல்நாட்டறிஞர் பலரும் இவ்வாறு கருதி யிருத்தலால் இவரது தலைமையும் நிலைமையும் அறியலாகும். மதிநலம் வளர மகிமைகள் வளர்ந்து வந்தன.

கவிஞன் ஒருமுறை உரைத்த விதி என்றும் குன்றுமல் எக்காலத்தும் நின்று நிலவி வருகின்றது. தான் தனியே இருந்து எண்ணிய எண்ணங்கள் உலகம் முழுவதும் பரவி ஒளிபுரிந்துவர இவன் அருள்புரிந்து வருகின்றான்; இவனது உதவி நிலைகள் அதிசய விபப்பாய்த் துதி கொண்டுள்ளன.

மனித உலகம் மதிநலம் உடையதாய் இனிது இயங்கி வருவது கலையின் காட்சியாலேயாம்; அந்தக் காட்சி கவிஞரிடமிருந்து மாட்சியாய் வந்துள்ளது. திவ்விய கலை ஞானங்களோடு தெய்வத் திருவருளும் தோய்ந்திருத்தலால் இவருடைய வாய் மொழிகள் உயிரினங்களுக்கு உய்வைத் தந்து வருகின்றன. மனித இனம் புனித வாழ்வு வாழ்ந்து தனி நிலையில் உயர்ந்து செல்ல வேண்டும் என்றே கவிஞர் உணர்வுநலங்களை யாண்டும் உதவி அருள் புரிந்து வருகின்றனர்.

உலகநீதி, அரசநீதி, தெய்வநீதி யாவும் கவிஞருடைய உரைகளில் சுவைகள் சுரந்து உவகை ஒளிகளை வீசியுள்ளன. தேவ தேவர்களும் இன்ன நிலையில் ஒழுகி வரவேண்டும்; அந்நிலை தவறினால் அவரும் இழிவுற நேர்வர் என இவர் துணிந்து மொழிந்து விடுகின்றனர். இவருடைய உள்ளத் துணிவும், உணர்வு நலங்களும், உரைகளின் திறங்களும் அதிசய நிலையில் துதிகொண்டு திகழ்கின்றன. பொருள் பொதிந்த மொழிகளை அருள் பொதிந்து அன்புரிமையோடு இன்புறத் தருகின்றனர். அருள்மொழி தெருள்ஒளிவீசியது.

உருளும் நேமியும் ஒண்கவர் எஃகமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்
தெருளும் நல்லறமும் மனச் செம்மையும்
அருளும் நீத்தபின் ஆவதுண் டாகுமோ?
(இராமா, மந்தரை 11)

தருமம், நேர்மை, கருணை ஆகிய இந்த மூன்று நீர்மைகளையும் அரசர் உரிமையாக மருவியிருக்க வேண்டும்; இல்லையேல் அவருடைய ஆட்சி நன்கு செல்லாது. மனச் செம்மை மனிதனுக்கு எல்லா நன்மைகளையும் இனிது அருளும்; அதனை மன்னன் இன்னுயிராகப் பேணிக் கொள்ள வேண்டும்; அதனால் அரிய மேன்மைகள் யாவும் உளவாம் என்பது தெரிய அதனை நடுவே வைத்து நயமாக உரைத்தார்.

திருமால் எனினும், சிவபெருமானே ஆனாலும், பிரமனே என்றாலும் தரும நீதியைத் தழுவிவரும் அளவே பெருமை; வழுவின் இழிவாம்; தேவ தேவர்கட்கே அவ்வாறு ஆயின் மனிதன் தவறினால் அவன் நிலை என்னும்? இதனை உன்னி உணர்ந்து அரசன் யாண்டும் அறநெறியாளனாய் ஒழுகி வர வேண்டும் என உலகம் ஆளவரும் அரசருக்குக் கம்பர் இவ்வாறு தரும நீதியைப் போதித்திருக்கிறார். வழிமுறைகளை வகுத்து மொழிவிளக்கு ஏற்றி வையம் உய்ய இவர் ஒளி புரிந்து வருவது உவகை சுரந்து வருகிறது.

வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும்ஓர்
செய்எனக் காத்துஇனிது அரசு செய்கின்றான்.
(இராமா, அரசியல் 12)

தசரதன் அரசு புரிந்த முறையை இது காட்டியுள்ளது.

ஒரு ஏழைக் குடியானவன்; ஒரு காணி நிலம் மாத்திரம் அவனுக்கு இருந்தது; அதனை உழுது பண்படுத்திப் பருவம்

தவருமல் விதைத்து விளைத்துக் கண்ணும் கருத்துமாக எவ்வாறு அவன் பாதுகாத்து வருவானே அவ்வாறே வையகம் முழுவதையும் அரசன் பேணி வந்தான்; அதனுல் பெருமகிமைகள் பெருகி வந்தன என்றதனுல் அவனுடைய ஆட்சியின் மாட்சியை நன்கு அறிந்து கொள்ளுகின்ருேம்.

தசரதன் பெரிய சக்கரவர்த்தி; அரசர்க்கு அரசனை அவன் இனிய பல இன்ப போகங்களை அனுபவித்துக் கொண்டு உல்லாசமாய் அரியணையில் அமர்ந்து பெரிய அழகுக் காட்சியாய் விளங்கியிருந்தான் என்று சொல்லவில்லை. குடிசனங்களை இனிது பாதுகாப்பதிலேயே என்றும் பெரிய குறிக்கோளுடையனுய் அரிய சேவையை ஆர்வத்தோடு அவன் செய்து வந்தான்; அவ்வாறே அரசர் யாண்டும் செய்து வர வேண்டும்; அங்ஙனம் செய்து வந்த போதுதான் ஆட்சியின் கடமையை அவர் நன்கு செய்தவராவார்; செயலில் வழுவு நேரின் இழிவும் பழியும் அழிவும் நேரும் என அரசர்க்கு இவ்வாறு எச்சரிக்கையாக ஆட்சி முறையை உணர்த்தியிருக்கிருர். உலகம் உயர்ந்து வர உரைகள் ஒளி புரிந்தன.

வையம் மன்னுயிராக அம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்கு
ஐயம் இன்றி அறம்கட வாதருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ?
(இராமாயணம்).

உலகம் உயிர்; அரசன் அதற்கு உடல். உயிரை உடல் இயல் உரிமையோடு பேணி வருதல்போல உலகத்தை அரசன் பேணி வர வேண்டும். சிறந்த சத்தியவானுய் அவன் உயர்ந்திருக்க வேண்டும் என இங்ஙனம் உரைத்திருக்கிருர். தரும நீதிகள் தோய்ந்து உண்மையும் உறுதியும் வாய்ந்து

உணர்வு நலம் உயர்ந்தபோது அந்த மன்னன் மகிமையாய் விளங்கி உலகிற்கு உயிராய் ஒளி புரிந்து அருளுகின்றான்.

வையம் இன்புறின் மன்னன் இன்புறும்;
வெய்யது ஒன்றுறின் தானும் வெய்துறும். (சூளாமணி)

பயாபதி என்னும் அரசன் நாட்டைப் பாதுகாத்து வந்த நிலைமைத் தோலா மொழித் தேவர் இப்படிக் காட்டியிருக்கிறார். உண்மையான அரசர் எப்படி இருக்கவேண்டும் என்பதை இது ஈண்டு நுட்பமாக உணர்த்தி யுள்ளது.

உலக நிலைகளையும் மனித சமுதாயத்தின் வாழ்க்கை முறைகளையும் நுணுகி நோக்கி உறுதி உண்மைகளைக் கவிஞர் தெளிவாக உணர்த்தி யருளுகின்றார். இயற்கை நிலைகள் அவருடைய மொழிகளில் வெளி வரும் பொழுது உவப்பையும் வியப்பையும் விளைத்து வருகின்றன. கூரிய மானச நோக்கு உடையவர் ஆதலால் சீரிய உண்மைகளை நேரே கண்டு உலகம் காண உரைத்துவிடுகின்றார். உலக பாலரான மன்னர்க்குப் பலவகையான அறிவு நலங்களை உரிமையோடு உரைத்து உறுதி நிலைகளைப் போதித்து வருகின்றார்.

வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. (குறள், 542)

உலகத்திலுள்ள உயிரினங்கள் மழையால் வாழ்ந்து வருகின்றன; ஒருநாட்டிலுள்ள குடிசனங்கள் அந்தத்தேசத்தை ஆளுகின்ற அரசனுடைய நீதியான ஆட்சி முறையால் மாட்சிமையாய் வாழ்ந்து வருகின்றனர்; ஆகவே தனது நிலைமையையும் தலைமையையும் உணர்ந்து அரசன் நெறிவழுவாமல் நின்று தரும நீதியோடு குடிகளைப் பாதுகாத்து வரவேண்டும் என்று தேவர் இப்படிப் போதித் திருக்கின்றார்.

ஒரு குடித்தலைவன் சரியாய்க் கவனிக்க வில்லையானல் அந்தக் குடும்பம் சீரழிந்துபோம்; அதுபோல் ஒரு தேசத் தலைவன் நெறியோடு நின்று முறைபுரியானுயின் அந்நாட்டுக் குடிகள் நிலைகுலைந்து போவர்; போகவே அந்த அரசு பழி யடைந்து அழிவுற நேரும்; இவ்வாறு நேராதவாறு அரசன் எவ்வழியும் விழி யூன்றிச் செவ்வையாய்ப் பேணிச் சீர்மை யோடு வாழ வேண்டும் என்று அறிவு கூறியிருப்பது கருதிக் காணவுரியது. வையம் இனிது வாழ வழி காட்டியுள்ளனர்.

'வான் நோக்கி வையம் வாழும்; கோன் நோக்கிக் குடி கள் வாழும் என்னும் உண்மையை இனிது எடுத்துக்காட்டி அரசுக்கு அறிவூட்டி யிருக்கும் நயம் உவகையை ஊட்டி வரு கிறது. தலைவனுக்குப்போதித்ததுநிலைமையைநோக்கிவந்தது

உலகம் சேமமாய் வாழ வேண்டும்; எல்லாரும் நெறி முறையோடு இனியராப் ஒழுகி வரவேண்டும் என்றேஉறுதி நலங்களை உரிமையோடு கவிஞர் உணர்த்தி வருகின்றார்; இதனல் அவர்களுடைய மன நிலையையும் மதி மாண்பையும் உயர்பெருந்தகைமையையும் நாம் உணர்ந்து கொள்கிறோம்.

பிசிராந்தையார் என்பவர் பாண்டி நாட்டில் பிறந்தவர். சிறந்த புலவர்; உயர்ந்த கவிஞர்; அரிய பல குண நலங்கள் அமைபப் பெற்றவர்; அரசர் யாவரும் உரிமையோடு போற் றி வர வரிசையோடு இவர் வாழ்ந்துவந்தார். பிறர் இன்புற்று வாழவே இவர் அன்பு கூர்ந்து யாண்டும் அறிவு கூறி வந் தார். ஒருமுறை பாண்டிய மன்னன் இவரை வேண்டி அழைத்தான். அவன் கலைகள் பலவும் நன்கு கற்றவன்; தலைமையான புலமையோடு நல்ல பண்பும் வாய்ந்தவன். அறிவுடை நம்பி என உலகம் உரிமையோடு புகழ்ந்து வர அவன் உயர்ந்திருந்தான். அந்த வேந்தனுடைய வேண்டு

கோளுக்கு இணங்கி இந்தப் புலவர் பெருந்தகை அங்கே போயிருந்தார். அரசவையில் அரியணை அருகே சரிபான ஆசனத்தில் இவர் அமர்ந்து அரசனோடு அறிவுரைகளாடி வந்தார். அவ்வமையம் அரசனுடைய நெருங்கிய உறவினர் சிலர் அங்கே வந்து மருங்கில் நின்றார்; அவருள் ஒருவர், அரசனிடம் மரியாதையோடு பேச நேர்ந்தார்: "நாடு நன்கு செழித் துள்ளது; குடிகளிடம் வரிகளைச் சிறிது உயர்த்த வேண்டும்" என நிதி மந்திரி என்ற முறையில் அவர் அதி விநயமா யுரைத்தார். அவ்வுரைகளைக் கேட்ட இக்கவிஞர் பிரான் அரசனை உரிமையுடன் நோக்கி உணர்வு நலம் கூறினார். அந்த உறுதிமொழி அரிய பண்பாடுகளுடையது; பொருள் இயல்புகளோடு அருள் இயல்புகளும் அமைந்தது; அரசுமுறை புரிபவர் யாவரும் கருதி யுணர வுரியது. அதிவிநயமாய் விளைந்து வந்த அந்த நீதி நெறி அயலே வருகிறது:

காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட்கு ஆகும்;
நூறு செறுவு ஆயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;
மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே. (புறம், 184)

குடிகளிடம் வரியை அதிகம் விரைந்து வாங்கவேண்டும் என்று உறவினர் கூறியபோது பாண்டிய மன்னனை நோக்கிப் பிசிராந்தையார் இவ்வாறு உரைத்தருளினர். "அரசர்பெரும! காணி அளவினும் குறையான சிறிய நிலமே

எனினும் அதில் விளைவதை முறைசெய்து ஊட்டின் யானை பல மாதங்கள் வரை நிறைவா யுண்ணும்; நூறு வேலியே ஆனாலும் யானை அதனுள் புகுந்தால் கால்களில் மிதிபட்டுக் கதிர்கள் பாழாம்; நிலமும் கெடும்; அதற்கு உணவும் இலையாம்; இந்த நிலைமையை அரசர் கருத வேண்டும்; அறிவுடைய வேந்தன் நெறியோடு வரிகளை வாங்கி வரின் சிறிய நாடா யிருந்தாலும் கோடிக் கணக்கான பொருள் பெருகி வரும்; அவன் பேராசையால் முறைகெட்டுக் குடிகளிடம் பொருளை விரும்பிக் கொடுமை புரியின் நாடு கெடும்; வருவாய் ஒழியும்; அரசு அழியும்; தருமநெறி தழுவாமல் ஆரவாரமாய் வீண்பெருமை கொண்டு திரியும் வெறியரோடு கூடாமல் நல்ல அறிவாளிகளையே உரிமைத் துணையாக உவந்து தழுவி அரசன் முறைசெய்து வாழவேண்டும்; அவ்வாறு வாழ்ந்துவரின் எவ்வழியும் அரசு சிறந்து விளங்கும்; யாண்டும் புகழ்கள் பொங்கி வரும்; இந்த உண்மையை உணர்ந்து கொள்க" என இவ்வாறு இவர் அரசனுக்குப் போதித்திருப்பதை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

புலவர்களுடைய நிலைமையும் நீர்மையும் தலைமையும் முன்பு எவ்வளவு சீர்மையுடையனவாய் இந்நாட்டில் சிறந்து இருந்துள்ளன! எத்தகையமுறையில்வாழ்ந்துவந்துள்ளனர்! என்பதை இவர் சரிதம் நன்கு வரைந்து காட்டியுள்ளது.

அருந்திறலாண்மையோடு உலகை ஆண்டுவந்த அரசரும் கவிஞர் சொல்லுக்குத் தலை வணங்கி யிருக்கின்றனர். எவ்வழியும் உறுதி நலங்களைச் செவ்வையாக உரைத்து வருதலால் வையம் இவரை வாழ்த்தி வரலாயது. உலக நிலையில் தலைமை அதிபதிகளாய் நிலவியிருந்த சக்கரவர்த்திகளினும் இவர் மிக்க மேன்மையுடையாராய் விளங்கி நின்றனர். தாம்

கருதியதை எங்கும் எவரிடமும் தலைமையான நிலையில் நின்று தகுதியாக உரைத்து வருதலால் நிரந்தரமான சுதந்திர அதிபதிகளாய்க் கவிஞர் யாண்டும் சிறந்து விளங்கி யிருந்தனர்.

"Poet is not any permissive potentate, but is emperor in his own right." (Emerson)

"கவிஞன் யாருக்கும் அடங்கினவன் அல்லன்; தனது உரிமையில் அவன் தனியான ஒரு சக்கரவர்த்தி" என அமெரிக்க மேதையான எமர்சன் இவ்வாறு குறித்திருக்கிறார். எந்த நாடும் கவிஞர்களை மேன்மையாகப் போற்றி மிகுந்த மரியாதை செய்து வந்திருப்பதை இது காட்டி நிற்கிறது.

பல அரசர்களை அடக்கி யாளும பேரரசனுக்கும் கவிஞன் மேலரசனாய் நின்று அவனுக்கு அறிவு நலங்களைக்கூற வல்லவன் ஆதலால் இவனது சீர்மையும் சிறப்பும் நீர்மையும் நேர்மையும் யாண்டும் மேன்மையாய் விளங்கி யுள்ளன.

பெரிய அரசன் ஆயினும் அவனது அதிகாரம் அத்தேசத்தின் எல்லைக்குள் அடங்கியதே; கவிஞனுக்கு உலகம் முழுவதும் தனி உரிமை ஆதலால் எங்கும் இவன் மதிப்பும் மாண்பும் பெற்று மாட்சிமை யோடு விளங்குகின்றான்.

"ஸ்வதேசே பூஜ்யதே ராஜா; வித்வான் ஸர்வத்ர பூஜ்யதே."

"தன் தேசத்தில் மாத்திரம் அரசன் சிறப்புறுகிறான்; கவிஞன் எங்கும் மதிப்பாய் மகிமைபெற்று நிற்கிறான்." என வடமொழியாளரும் கலைஞரைக் குறித்து இங்ஙனம் உரைத்திருக்கின்றனர். மெய்யான புலமைக்கு வையமும் வானமும் தலைவணங்கி வருகின்றன. அவ் வரவு உறவுரிமையோடு உவகை சுரந்து தலைமையாய் வளர்ந்து வந்துள்ளது.

தன் கவிகளால் அறிவு நலங்களை உலகத்துக்குச் சுவை யாக ஊட்டி வருதலால் கவிஞனை அது வழி வழியாக வாழ்த் திவருகிறது. உதவி நிலை உயர் புகழாய் ஒளி வீசி யுள்ளது.

தன் சீவிய காலத்தில் மாத்திரமன்றிக் கவிஞன் புகழ் உலகில் என்றும் நின்று நிலவு கின்றது. மனித சமுதாயம் புனிதம் உறும்படி அறிவு நலங்களை இனிதுவழங்கி யிருத்த லால்கவிஞன் தனியுரிமையாளனுப்த்தழைத்துநிற்கின்றான்.

"Poet is a heroic figure belonging to all ages." [Carlyle]

"கவிஞன் எல்லாக் காலத்துக்கும் உரிமையான ஒரு பெரிய ஞான சோதி" எனக் கார்லைல் என்னும் அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். தம் காலத்தில் உரைத்த உறுதி மொழிகள் பின்பு தோன்றி வருகிற மனுக்குலத்துக்கெல் லாம் அறிவொளிகளாய் நின்று ஆன்ற உணர்வு நலங்களை அருளி வருதலால் கவிஞர் என்றும் நித்தியராய் நிலைத்து வருகின்றார். அவரது நிலை புகழ்மணம் வீசிஒளிமிகுந்துளது.

அரசர் முதல் யாவருக்கும் உறுதி நலன்களை உணர்த்தி உலக மக்களுக்கு அவர் உதவி புரிந்து வருவது உவகை சுரந்து வருகிறது. நித்திய அநித்திய நிலைகளை நேரே எடுத் துக்காட்டித் தத்துவங்களைத் தெளிவாக விளக்கிக் காலம் உள்ள பொழுதே உயிர்க்கு நன்மையை நாடிக்கொள்ளும் படி உய்தியைச் செம்மையாக உணர்த்தி யருளுகின்றார்.

இன்னு வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே. (புறம்,363)

மரணம் வருமுன்னே உன் உயிர்க்கு உறுதியைச் செய்து கொள்ளுக என ஒரு மன்னனை நோக்கி வெண் தேரையார் என்னும் கவிஞர் இவ்வாறு கூறி யிருக்கிறார்.

ஓர்இல் நெய்தல் கறங்க ஓர்இல்
ஈர்ந்தண் முழுவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்ற அப்பண்பி லாளன்
இன்னாது அம்மஇவ் வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந்தோரே. (புறம்,194)

ஒரு வீட்டில் சாப் பறை அடிக்க; ஒரு மனையில் கலியாண முழவு அதிர; கணவனோடு கூடியுள்ளவர் மலர் அணிந்து மகிழ; பிரிந்திருப்பவர் கண்ணீர் சொரிந்து அழ; செல்வர் களித்து வாழ; வறியர் பசித்து வருந்த; இன்னவாறு விபரீத நிலையில் இந்த வுலகத்தை அந்த மலரவன் படைத்திருக்கிறுன்; இங்கே துன்பமே அன்றி இன்பம் இல்லை; எங்கும் கொடுமையும் தீமையுமே மண்டி யுள்ளன; அல்லலான இவ்வுலக நிலையை உணர்ந்து பேரின்ப வீட்டுக்குரிய நல்ல உறுதி நலன்களை உணர்ந்து செய்து கொள்ளுங்கள் என உலக மக்களை நோக்கி நன்கணியார் என்னும் புலவர் பெருமான் இங்ஙனம் உரிமையோடு உரைத்திருக்கிருர்.

படைத்தோன் அப் பண்பிலாளன் எனப் பிரமாவைக் குறித்து இவர் வருந்தி இகழ்ந்திருப்பது இவருடைய மனநிலையையும் அருள் நீர்மையையும் நேரே விளக்கியுள்ளது.

உலக வாழ்க்கையில் மக்கள் படுகிற துயர நிலைகளைக் கண்டபொழுது கவிஞர்களுடைய உள்ளம் உருகி இரங்குகிறது; மனவேதனையான அந்த இரக்கத்தால் சிருட்டிகருத்தாவையும் அவர் இவ்வாறு இடித்து மொழிய நேர்ந்தார்.

நல்ல உத்தமிக்குப் பொல்லாத ஒருவன் கணவனுய் வாய்ந்திருந்தான்; அன்பு நலமின்றி நாளும் அவளைத் துன்புறுத்தி வந்தான். அவனிடமிருந்து அவள் அல்லல் அடை

வதை ஔவையார் கண்டார். உள்ளம் வருந்ினர். இனிய ஒரு பெண்ணைக் கொடிய முரடனுக்குக் கூட்டி வைத்துள்ள விதியை நொந்தார். மதியிழந்து படைத்தான் என மறுகி நின்றார்; அந்த மனவேதனையுடன் வந்த பாட்டு அயலே வருகிறது.

அற்றதலை போக அறாததலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ---வற்றும்
மரமனையா னுக்கிந்த மானை வகுத்த
பிரமனையான் காணப் பெறின். (ஔவையார்)

இப்படிக் கொடுமையாகப் படைத்திருக்கிற அந்தப் பிரமனை நான் நேரே கண்டால் அவனுடைய தலையைத் திருகிப் பறித்து எறிவேன் என்று இந்தக் கிழவி இப்படிப் பாடியிருக்கிறாள். இப்பாட்டில் இவளுடைய உள்ளத்தையும் உருக்கத்தையும் இரக்கத்தையும் ஊக்கத்தையும் உறுதி நிலையையும் ஒருங்கே கண்டு நாம் உவந்து வியந்து நிற்கிறோம்.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான். (குறள், 1062)

மனிதர் முயன்று பொருள் ஈட்டி உயிர் வாழ வேண்டும்; அதுதான் முறை; அதைவிடுத்து யாசகம் செய்து வாழலாம் என்று இரப்பையும் ஒரு தொழிலாகப் பிரமன் படைத்திருப்பான் ஆனால் மடத்தனமான அந்தப் பாவத்தால் அவன் நாசமாய்ப் போகட்டும் என்று வள்ளுவப் பெருமான் இப்படி உள்ளம் கொதித்துச் சாபமிட்டிருக்கிறார். இக்கவி யூக விவேகமாய் ஓர்ந்து சிந்திக்கத் தக்கது.

இரப்பு மிகவும் இழிவானது; கொடியது; மானத்தைக் கெடுத்து மரியாதையை அழித்து முயற்சியை ஒழித்து உயர்ச்சியைத் தொலைத்து மனிதனை எவ்வழியும் சிறுமைப்

படுத்துவது; அந்த ஈனத்தை யாண்டும் தீண்டலாகாது; அதனை ஒரு தொழிலாக ஆண்டவன் படைக்கவில்லை; மானக்கேடான இரப்பு இறப்பினும் தீயது; அதனைக் கனவிலும் கருதாமல் கைசெய்து வாழுங்கள் என்று உலக மக்களுக்குத் தேவர் இவ்வாறு உரிமையோடு உறுதி கூறியுள்ளார். தக்க நிலையில் தகுதியாக மக்கள் வாழ வேண்டும் என்றே எவ்வழியும் செவ்வையாக இவர் தெருட்டி வருகிறார். இவரது நீதியான போதனையில் போதனும் போதனுயினன்.

நெறிமுறையோடு இன்பமாய் இனிது வாழும்படி உயிர்களைப் படைக்க வேண்டும் என்று பிரமனுக்கும் கவிஞர் அறிவு கூறுகின்றனர். இவருடைய உள்ளத் துணிவுகளும் உணர்ச்சி நிலைகளும் உரைகள்தோறும் ஒளிவீசி உணர்வின் சுவைகளை இனிது விளைத்து வருகின்றன.

அன்பும் அறிவும் அமைதியும் உடையராய்ப் பண்பாடுடன் வாழ்ந்து உறுதியுண்மைகளை ஓர்ந்து உயர் நிலைகளைத் தேர்ந்து உய்தி பெற வேண்டும் என்றே மக்களுக்குப் பக்குவமாகத் தக்க வகையில் யாண்டும் அறிவு நலங்களை உணர்த்தி உரிமையோடு கவிஞர் உறுதி புரிந்தருளுகின்றார்.

மன்னுநீர் மொக்குள் ஒக்கும் மானிடர் இளமை; இன்பம்
மின்னின் ஒத்து இறக்கும்; செல்வம் வெயிலுறு பனியின் நீங்கும்;
இன்னிசைஇரங்கும்நல்யாழ்இளியினும் இனிய சொல்லாய்.
அன்னதால்வினையின்ஆக்கம்அழுங்குவ துஎன்னைஎன்றுள்!
(சீவகசிந்தாமணி)

பாளையாம் தன்மை செத்தும், பாலனும் தன்மை செத்தும்,
காளையாம் பருவம் செத்தும், காமுறும் இளமை செத்தும்,
மீளுமிவ் வயதும் இன்னே மேல்வரு மூப்பும் ஆகி
நாளும்நாள் சாகின்றுமால்நமக்குநாம்அழாதது என்னே?
(குண்டலகேசி)

கொலையானை மேலோர் குளிர்வெண் குடைக்கீழ்ப்
பலயானை மன்னர் பலர்போற்ற வந்தான்
மலையாகம் போழாக மற்றிவனே மாய்ந்தான்;
நிலையாமை சால நிலைபெற்ற தன்றே. (சூளாமணி)

வந்துடன் வணங்கும் வானோர் மணிபுனை மகுடகோடி
தந்திரு வடிகள் ஏந்தும் தமனியப் பீடம் ஆக
இந்திர விபவம் பெற்ற இமையவர் இறைவர் எனும்
அந்திரு உருவம் பொன்றத் தளர்ந்தனர் அனந்தமன்றோ?
(யசோதரகாவியம்)

கடுங்கால் நெடுவெளி இடுஞ்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்.
(சிலப்பதிகாரம்)

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலில் கழியும் இவ்வுலகத்து. (நற்றிணை)

சீலமும் தருமமும் சிதைவில் செய்கையும்
சூலமும் திகிரியும் சொல்லும் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க்கு ஆயினும்
காலம் என்று ஒருவலை கடத்தல் ஆகுமோ?
(இராமாயணம்)

விண்ணில் இன்பமும் வீதல் கேட்டுமால்
மண்ணில் இன்பமும் மாய்தல் காண்டுமால்
எண்ணில் இன்பமாம் ஈறி லாததே
நண்ணி நாமினி நயக்கற் பாலதே. [சாந்திபுராணம்]

நெருநல் என்பது சென்றது; நின்ற
இன்றும் செல்லா நின்றது; முன்சென்று
வருநாள் கண்டார் யாரே? அதனால்
ஒருநாள் கைப்படுத் துடையோர் இன்மையின்
நல்லது நாடுமின்! உள்ளது கொடுமின்!

வழாஅல் இன்பமும் புணர்மின் அதாஅன்று
கிழது நிரகம் புகினும்; மேலது
விசும்பின் பிடர்த்தலை ஏறினும், புடையது
நேமி மால்வரைக்கு அப்புறம் புகினும்
கோள்வாய்த்துக் கொட்குங் கூற்றத்து
மீளிக் கொடுநா விலக்குதற்கு அரிதே. (ஆசிரியமாலை)

இந்தக் கவிகளைக் கவனமாப் படியுங்கள்; பொருள் களைக் கருத்து ஊன்றி நோக்குங்கள்; இருள் நீங்கி இன்பம் பெறும்படி இவை போதித்துள்ளன. மனித வாழ்வு குறு கிய காலம் உடையது; விரைவில் அழிவது; நாள் கழிவது ஆயுள் கழிவதாம்; காலம் கழியும்தோறும் காலன் அணுகி வருகிறான்; நாளும் இறந்துகொண்டேயிருக்கிறோம்; முடிவாய் இறந்துபடுமுன் பிறந்த பயனை விரைந்து பெற்றுக்கொள்ள வேண்டும்; கரும நீதிகளைத் தழுவி நெறிமுறையே ஒழுகி இறைவனை நினைந்து உருகி எவ்வுயிர்க்கும் அன்பு செய்து யாண்டும் இதமாய் நடந்து உபர்கதியை அடைந்துகொள் ளுங்கள் எனக் கவிஞர்கள் இங்ஙனம் உணர்த்தியுள்ளனர்.

நிலையாமையை நேரே எடுத்துக் காட்டி நிலையான உறுதிநலனைக் கருதியுணர்ந்து நெறிமுறையே ஒழுகி விரைவில் உய்தி பெறும்படி உரிமையோடு உரைத்திருக்கின்றனர்.

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. (குறள் 331)

நிலையில்லாத பொருள்களை நிலையுடையன என்று மருண்டு மயங்கி வீணான பாசபந்தங்களை நாளுமல் செய்து கொண்டு உண்மை நிலையை உணர்ந்து தெளியாமல் அழிந்து போவது புன்மையான மடமையாம்; புலையான அந்த இழிவு நீங்கித் தெளிவு ஓங்கி மாந்தர் உய்யவேண்டும் எனத் தேவர் கருணையோடு ஈண்டு இவ்வாறு வேண்டியிருக்கிறார்.

நில்லாதவற்றை நிலை என்று நம்பிப் புலையாடி நிற்பவர் கடையர் என்று சொல்லாமல் கடை என அறிவின்மேல் வைத்துச் சொன்னது விநயம் மிக வுடையது. இழிவான நிலையில் இழிந்திருந்தாலும் கடையர் என்றால் மாந்தர் வருந்துவர்; அவ்வாறு வருந்தும்படி கூறலாகாது; உறுதியான உண்மையையும் இதமாகவே இனிது சொல்ல வேண்டும். நீங்கள் பெரியவர்கள்; தலைமையான அறிவாளிகள்; உங்கள் அறிவு புலை யான நிலையில் இழிந்துள்ளதே; அவ்வாறு இழிய விடலாமா? அதனால் எவ்வளவு கேடுகள் விளைகின்றன! அவ் விளைவுகளை விழி திறந்து நோக்குங்கள்; இழிந்து போகாதீர்கள்; விரைந்து தெளிந்து உய்தி பெறுங்கள்! என்று உரிமையுடன் அடிகள் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். இவரது போதனை முறைகள் சாதுரியங்களுடையன.

அநித்தியத்தை அறிவுறுத்தி நித்திய தத்துவங்களை வித்தகமாயுரைத்திருப்பதுஉய்த்துணரத்தக்கது. மனிதர் அழிவு நிலையில் உள்ளனர்; அவர் தெளிவடைந்து விழுமிய நிலையில் உயரவேண்டும் என்னும் அருளுடைமையால் கவிஞர்கள் ஈண்டு ஒருமுகமாய் இவ்வாறு உரையாடியிருக்கின்றனர்.

"All humane things are subject to decay,
When Fate summons, monarchs must obey." (Dryden)

"எல்லா மனிதரும் அழிவு நிலையில் உள்ளனர்; எமன் அழைத்தபொழுது சக்கரவர்த்திகளும் தலைவணங்கிப்போக வேண்டும்" என ட்ரைடன் என்னும் ஆங்கிலக் கவிஞர்உலக வாழ்வின் நிலையைக் குறித்து இங்ஙனம் பாடியிருக்கிறார்.

Like the dew on the mountain,
Like the foam on the river,
Like the bubble on the fountain,
Thou art gone, and for ever! [Scott]

"மலையில் விழும் பனி, நதியில் எழும் நுரை, நீரில் தோன்றும் குமிழி என நீ அழிந்துபோவது என்றும்உறுதி யா யுள்ளது" என மனித வாழ்வின் நிலைமையைக் குறித்து ஸ்காட் என்பவர் இவ்வாறு செவ்வைபா உரைத்திருக்கிறார்.

"Death is certain to all: all shall die." (Shakespeare)

"மரணம் எல்லாருக்கும் உறுதி; யாவரும் சாவார்." என ஷேக்ஸ்பியர் இன்னவாறு தெளிவாக் குறித்திருக்கிறார்.

மனித வாழ்வு நிலையற்றது; அது நிலைத்துள்ளபொழுதே நிலையான உறுதி நலன்களை மனிதர் அடைந்துகொள்ள வேண்டும் என எந்த நாட்டுக் கவிஞரும் உணர்த்தி யுள்ள னர் என்பதை இதனுல் நன்கு உணர்ந்து கொள்கின்றோம்;

புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை---இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள்அலறச்
சென்றான் எனப்படுத லால். [நாலடியார்]

இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்கும் தீங்கினையுன் னாதே---பருத்ததொந்தி
நம்மதென்று நாம்இருப்ப நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்கும் தான். [பட்டினத்தார்]

நிலையாமை நிலையை நேரே எடுத்துக்காட்டித் தம்நெஞ்சுக்கும் உலகத்துக்கும் கவிஞர் இவ்வாறு உறுதி நலங்களை உரிமையோடு தெளிவாக நன்கு உணர்த்தி யிருக்கின்றார்.

உயிர் புனிதமாய் உயர்கதி அடையும் நிலைகளையே எவ்வழியும் தலைமையாக இந்நாட்டுக் கவிகள் உரைத்து வந்துள்ளனர். மறுமை நோக்கோடு பரத்தின் திறத்தில் இவ்வாறு மிகுந்த குறிக்கோளுடையராயினும் உலக இயற்கைகளையும் உயிர் வருக்கங்களையும் பல்வேறு வகைப்பட்ட நிலை

களையும் நுனித்து உணர்ந்து இனித்த முறையில் யாண்டும் உறுதி யுண்மைகளை நன்கு வெளிப்படுத்தி யிருக்கின்றனர்.

வான மண்டலத்தின் வளங்களையும், சூரிய சந்திரர்களுடைய வரவு செலவுகளையும், இராசி மண்டலத்தின் கிரக ஓட்டங்களையும், பூமண்டலத்தின் இயக்கங்களையும், விலங்கு பறவை முதலிய பிராணிகளுடைய இயல்புகளையும், மரம் கொடி செடி முதலிய தாவர வருக்கங்களின் நீர்மைகளையும், தேவர் நிருதர் அசுரர் மனிதர் முதலிய சீவகோடிகளின் செயல் இயல்களையும், மானச தத்துவங்களையும், ஞான யோக சித்திகளையும், ஓசை ஒலிகளின் உளவுகளையும், பலவகையான கலை நிலைகளையும் நன்கு தெளிந்து எங்கும் சுவையாக எதையும் கவிஞர் இனிது விளக்கியருளுகின்றார்.

இவரது காட்சியில் யாவும் மாட்சியாய் வந்து விளங்கி நிற்கின்றன. எல்லாம் அறிய வல்ல இறைவனுடைய அருளை மருவியிருத்தலால் கவிஞர் எதையும் எளிதே அறிந்து கொள்ளுகின்றனர். இவரது அறிவு அதிசய நிலையில் ஒளிபுரிகிறது.

"ரவி எறுகநி தாவு கவி எறுகுநு"

"சூரியன் அறியாததையும் கவிஞன் அறிந்து கொள்ளுவான்" எனத் தெலுங்கில் இவ்வாறு ஒரு பழமொழி வழங்கி வருகிறது. கவிகளுடைய கலைஞானமும் மதிநலமும் அதிசய நிலையின என்பதை இதனால் அறிந்து கொள்ளுகிறோம்.

"நாந் ரிஷி: குருதே காவ்யம்"

"ரிஷித் தன்மை யில்லாதவன் காவியத்தைச் செய்ய முடியாது" என இவ்வாறு வடமொழியில் வழங்கி வருகிறது. அரிய தவயோகிகள்போல் கவிகள் பெரிய ஞானக் காட்சிகளை அடைந்திருக்கின்றனர். அவரது மானசநோக்கு

எதையும்துருவியறிந்து எவ்வழியும்செவ்வி மிகுந்து திவ்விய கதியில் உயர்ந்து சீர்மையோடு சிறந்து விளங்கி வருகிறது.

**Poet's eye doth glance from heaven to earth, from earth to heaven** [Shakespeare]

"கவிஞனது கண் வானுலகத்தையும் வையகத்தையும் ஒருங்கே நோக்கி உண்மையை விரைந்து உணர்ந்து கொள்கிறது" என ஆங்கிலக் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். கவி நோக்கு ரவி நோக்கா யுள்ளது.

உயிரினங்கள் நெறிமுறையே ஒழுகி உலகம் நல்ல நிலையில் இயங்கி வரவேண்டும் என்றே கவிஞர் உண்மைகளை யாண்டும் உரிமையோடு நன்கு சொல்லி யருளுகின்றார்.

சோழ மன்னன் மகன் நல்ல அழகன்; உதய குமரன் என்னும் பேரினன்; அவன் மணிமேகலையை மருவி மகிழ விழைந்து உருகி அலைந்தான். அவனை நோக்கி ஒரு பெண் தெய்வம் புத்தி போதித்ததாகச் சாத்தனர் என்னும் கவிஞர் கூறியிருப்பது இங்கே கூர்ந்துஓர்ந்துகொள்ள வருகின்றது.

"கோன்நிலை திரிந்திடின், கோள்நிலை திரியும்;
கோள்நிலை திரிந்திடின், மாரிவறம் கூரும்;
மாரி வறங்கூரின் மன்னுயிர் இல்லை;
மன்னுயிர் எல்லாம் மண்ஆள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதி இன்றாகும்;
தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த
அவத்திறம் ஒழிக." (மணிமேகலை, 7)

அரசன் நீதியின்றி நெறிதிறம்பினல் இவ்வுலகில்மழை பெய்யாது; மழை இல்லையானல் உயிர்கள் துயராய் அழியும்; அவ்வாறு அழியின் அரசன் பழிபாவங்களை அடைந்து பாழ்படுவான் என அக் குமரனுக்கு இது உணர்த்தியுளது.

கோள்நிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீணிலம் மாரி இன்றி விளைவு அஃகிப் பசியும் நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந்து அறங்கள் மாறி
ஆணை இவ் வுலகு கேடாம் அரசுகோல் கோடின் என்றான்.
(சீவகசிந்தாமணி)

அரசன் கோல் கோடினால் இவ்வுலகில் விளையும் துயர நிலைகளை இங்ஙனம் குறித்துக் காட்டி அரச குலத்துக்குத் திருத்தக்க தேவர் இப்படிப் புத்தி போதித்திருக்கின்றார்.

அரசியல் துறைகளையும் ஆட்சி முறைகளையும் இந்நாட்டுக் கவிஞர்கள் அறிந்திருப்பதுபோல் வேறு எந்த நாட்டுக் கவிஞரும் இந்த அளவில் அறிந்து கொள்ள வில்லை. அரசியல் முறைகளை இவர் உணர்ந்து தெரிந்துள்ள நிலைகளைத் தனித் தனியே விளக்க நேர்ந்தால் அது பெரிய ஆட்சியின் காட்சியாய்ப் பெருகிச் சிறந்த ஒரு வேந்து நூலாய் விரிந்துவிடும்.

நாடும் மக்களும் நலம்பல அடையும்படி பாடும் புலவர்கள் பாடுபட்டு வந்துள்ளனர். உலக பரிபாலகர் என ஒளி பெற்று நின்ற மன்னர்களும் புலவர் வாய்மொழிக்குச் செவி சாய்த்து அவரது போதனைகளைக் கேட்டு மகிழ்ந்து ஆதரவோடு தெளிந்து ஆட்சி புரிந்து வந்திருக்கின்றனர்.

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் தமிழில் பெரும் புலமையுடையவன். அருந்திறலும் பெருந்தகைமையும் ஒருங்கு நிறைந்திருந்தவன். அவன் குடபுலவியனார் என்னும்புலவரைத் தனக்கு உரிமையான அருமைத் துணையாகப் பேணி வந்தான். அம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணையாய் இசைந்திருந்த இவர் சமையம் நேர்ந்த போதெல்லாம் நன்னயமான நீதி முறைகளையும் உறுதி நலங்களையும் உரிமையுடன்உரைத்துவந்தார். நிலத்திலிருந்துவிளைவுகளைப்பெருக்

க் குடிசனங்கள் செழித்து வாழும்படி அரசன் இழைத்து வரும் அளவே அவனுடைய கோலும் குடையும் தழைத்து வரும் என ஒருமுறை இவர் உரைத்தருளினர். மன்னனை நோக்கி அன்று இவர் சொன்ன அறிவுரை அரிய பல பொருள்கள் பொதிந்தது; பெரிய சுவைகளை நிறைந்தது; கவி யுருவில் வந்தது; அதன் ஒரு பகுதி அயலே வருகிறது.

மல்லல் மூதூர் வய வேந்தே!
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ ஆகல் வேண்டினும் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்
தகுதி கேளினி மிகுதி யாள!
நீரின்று அமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
உணவுஎனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே;
வித்தி வான்நோக்கும் புன்புலம் கண்ணகன்
வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்கு உதவாதே; அதனால்
அடும்போர்ச் செழிய! இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண் தட்டோரே
தள்ளாதோர் இவண் தள்ளா தோரே. (புலவியனர்)

இந்தப் பாட்டை ஊன்றிப் படியுங்கள்; பொருளை அமைதியாக் கவனியுங்கள்; ஈண்டிய கேள்வியுடைய பாண்டிய மன்னனையும், அவனுக்கு வேண்டிய நீதியை வேண்

டிய அளவு விவேகமா யினிது உரைத்த கவிஞர் பெருமா னையும் ஈண்டு ஒருங்கே கண்டு நாம் உவந்து நிற்கின்றோம்.

நீதி போதனை.

"அரசர் பெரும! பொன்னுலகம் பூவுலகம் என்னும் இருவகை நிலங்களினும் நீ அரிய திருவுடையனாய்ப் பெருமை அடைய வுரியவன்; பகைவரை வென்று உலகம் முழுவதை யும் இனித்த முறையில் ஆளும் தனித் தலைமையாளன்; அறமும் பொருளும் புகழும் இன்பமும் மருவி மகிழும்பெரு மித நிலையினன்; இத்தகைய உத்தம நிலையில் உயர்ந்துள்ள நீ உய்த்துணர்ந்து கொள்ள வேண்டிய உறுதிநலம் ஒன்றை ஈண்டு உனக்குச் சொல்லுகின்றேன்: உண்ணும் உணவினால் உயிர்கள் வாழ்ந்து வருகின்றன; அவ்வுணவு பயிர்களில்விளை கின்றன;அப்பயிர்களை நிலம்விளைத்தருளுகிறது; அத்தகைய நிலம் எவ்வழியும் வளமுடையதாய்ச் செழித்திருக்க வேண் டும்; நிலத்தின் செழிப்பு நீரால்நிலைத்து வருகிறது;நீர்வளம் இன்றேல் நிலவளம் குன்றும்; ஆகவே ஆறு குளம் ஏரி கிணறு முதலிய நீர் நிலைகள் யாண்டும் பெருகியிருக்கவேண் டிய வினைகளை நீ விரைந்து செய்யவேண்டும்; வித்துகளை நிலத் தில் விதைத்துவிட்டு வானம் மழை பொழியாதா? என்று அண்ணாந்து ஏங்கி நிற்பது அவல நிலையாம்; வானம் பார்த்த நிலத்தை வைத்து வாழ்பவன் மானம் காத்தவன் ஆகான்; உழவன் வானத்தை நோக்கி மறுகாதபடி இம்மண்ணில் எங் கணும் தண்ணீர் நிலைகளைப் பெருக்கியருள்; அதனால் புண் ணியங்கள் பல உளவாம்; நீர் தழைய நிலம் தழையும்; அது தழைய விளைவுகள் பெருகிவரும்; அவ்வாறு விளைபொருள் கள் விரிந்து நிறைந்துவரின் உயிரினங்கள் யாண்டும் உவந்து வாழும்; சீவகோடிகள் மகிழ்ந்து வரவே அது உயர்ந்த

புண்ணியமாம்; அதனால் நீ எண்ணரிய மகிமைகளை அடைந்து விண்ணவரும் புகழ மேலான இன்பநலன்களை அடைவாய்; உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே; அந்த உண்டியை நீர் கொடுக்கிறது; அந்த நீரை நீ பெருக்கிக் கொடுக்கவேண்டும்; அது புகழையும் பொருளையும் புண்ணியத்தையும் விரித்துக் கொடுக்கும்; விரிந்த கடல் சூழ்ந்த உலகத்திற்கு நீ வியனான உயிராய் இனிது அமைந்திருக்கிறாய்; உனது கடமையை உணர்ந்து உரிய சீர்மையை நீர்மையோடு விரைந்து செய்க" என வேந்தனுக்குக் கவிஞர் உறுதி கூறியுள்ளார்.

பொருளாதார நிலைகளையும், குடிகளுக்கு அரசன் உரிமையோடு செய்ய வேண்டிய முறைகளையும், துறைகள் தோறும் வளம் பெருக்கி வாழ வேண்டிய வகைகளையும், நாட்டு நலன்களையும் இப்பாட்டு நன்கு காட்டியுள்ளது. இதைக் கேட்ட பாண்டிய மன்னன் வேண்டிய நீர்நிலைகளைத் தன் நாட்டில் யாண்டும் பெருகச் செய்து விளைவுகளை விருத்தியாக்கி விரிபுகழ் உடையனாய் உயர்ந்து வாழ்ந்தான்.

தேசத் தலைவரும் தலை வணங்கி யோசனை கேட்டுப் புலவரை அவர் போற்றி வந்துள்ளனர். உடலுக்குத் தலை போல் உலகத்திற்கு அரசர் தலைவராயினும் கவிஞர் அவர்க்குக் கண்ணாய் அமர்ந்து அரிய பல உண்மைகளைக் காட்டியிருக்கின்றனர். அக் காட்சியால் அவர் மாட்சி அடைந்துவந்தனர்.

அரசர் சிரசா அருங்கவிஞர் கண்ணாப்
பரசும் உலகம் பணிந்து

அரசர் தலை; கவிஞர் கண் என்றதனால் இவரது காட்சியும் மாட்சியும் காணலாகும். உருவகத்தில் மருவியுள்ள பொருள் நயங்களைக் கருதியுணரின் அரிய பல உண்மைகளை அறிந்து உறுதியான நன்மைகளைத் தெளிந்து கொள்ளலாம்.

ஆட்சித் துறைகளின் காட்சிகளை அரசர்க்கு எடுத்துக் காட்டி அடுத்து அடுத்து இடித்து அறிவுறுத்தி நம் கவிஞர்கள் அரசுக்கும் ஆட்சிக்கும் நாட்டுக்கும் நலம் பல புரிந்து வந்துள்ளனர். இவரது உபகார நிலைகள் உயர்தரமுடையன.

தமிழறிஞர்களுக்கு அரசியல் நிலை அவ்வளவாகத் தெரியாது என அதில் எவ்வளவோ தெரிந்தவர்போல்இக்காலத்தில் சிலர் இறுமாந்து பேசுகின்றனர்: அப்பேச்சு அவரது சிறுமையையும் மடமையையும் நேரே வெளிப் படுத்தி நிற்கிறது. கபட வஞ்சனைகளைச் சாதுரிய சாகசமாய்ப் புரிந்து வருவதே அரசியல்என்றுகளித்துத்திரிவதுஇளித்து வெறுக்கத் தக்கது. கவிஞரைக் கண் எனப் பேணி உரிமையோடு போற்றிவந்த உண்மை அரசுகள் ஒழிந்து போனமையால் புன்மைகள் புகுந்து கொள்ள நேர்ந்தன. பழைய நன்மைகள் வளமையாக வந்து நிறைந்த போதுதான் உலகம் செழுமையாகச் செழித்து விளங்கும். தேச சுதந்திரமும், மானவீரமும், ஞானசீலமும் மனிதனுடைய வாழ்வை மகிமைப்படுத்திப் புனித நிலைகளில் பொலிந்து வருகின்றன.

வாழ்வு தூய்மை தோய்ந்துவரின் அது மாண்பாய் உயர்ந்து விளங்குகிறது. நெறிமுறைகளோடு நியமமாய்ப் பழகி வருகின்றவனே விழுமிய நிலையில் வெளிவருகின்றான். புகழ்பெறுவது என்பது மனித வாழ்வின் உயர் பேறாய் அமைந்துள்ளது. இசைமிகப் பெற்றுத் திசைமெச்ச வாழ வேண்டும்; அவ்வாறு வாழ்பவனே உயர்தர மனிதனாய் ஒளிபெற்று வருகின்றான்; அங்ஙனம் வாழாதவன் வாழ்வு தாழ்வா யிழிந்து பாழான நிலையில் பழி படுகின்றது

வசைஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசைஒழிய
வாழ்வாரே வாழா தவர். (குறள்,240)

மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதை இதுகுறித்துள்ளது. யாதொரு வகையும் படியாமல் எவ்வழியும் இசை விளைய வாழ்ந்து வருபவனே உயர்ந்த மனிதனும் உயிர் வாழ்ந்தவன் ஆகின்றான்; அவ்வண்ணம் வாழாதவன் செத்தவனே யாவான் எனத் தேவர் இவ்வண்ணம் உணர்த்தியுள்ளார். தன் வாழ்வு மண வாழ்வா? அல்லது பிணவாழ்வா? என்பதை இந்த உரைகல்லில் உரைத்து நோக்கி ஒவ்வொரு மனிதனும் ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்;
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு. (கடுங்கோ)

தந்தை முதலிய முந்தையோர் ஈட்டிவைத்துள்ள பொருளை வீணே இருந்து தின்று தொலைப்போர் உயிர் வாழ்ந்தவராகார்; வறுமை வாழ்க்கை இரத்தலினும் இழிந்தது; ஆதலால் நீயே முயன்று சொந்தமாகப் பொருள்ஈட்டி நல்ல செல்வனும் உயர்ந்து அடுத்தவரை ஆதரித்து மானம் மரியாதைகளோடு ஞானமாய் வாழுக என உலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தலைமையாய் உணர்ந்து ஒழுகும்படி பெருங்கடுங்கோ என்னும் கவிஞர் இங்ஙனம் போதித்திருக்கிறார். ஊக்கி வினைசெய்என ஊக்கியிருப்பது உணரவந்தது.

இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுடன் இருந்தோர்க்கு அருபுணர்வுஇல். (கோசனார்)

ஊக்கி முயலாமல் உள்ளம் மடிந்து சோம்பேறியாய் இருப்பவர்க்கு இன்பமும் புகழும் இலவாம்; துன்பமும்பழியுமே தொடரும் எனக் கருவூர்க்கோசனார் என்னும் கவிஞர் வினையாண்மையை இங்ஙனம் விசுபமாக் கூறியிருக்கிறார்.

நாளும் நாளும் ஆள்வினை அழுங்க
இல்இருந்துமகிழ்வோர்க்குஇல்லையால்புகழ். (சிற்றடக்கம்)

சிறந்த முயற்சிகளைச் செய்து உயர்ந்து கொள்ளாமல் சுக போகி என்று அவமாய் வீட்டிலுறைந்து வீணே உண்டு களித்து வருவோர் புகழ் முதலிய உயர்நலன்களைக் காணார்; பழிகளையே கண்டு பாழ் படுவார் என இது காட்டியுள்ளது.

உலக மக்கள் புகழோடு வாழ்ந்து உயர்நிலையை அடையும்படி இன்னவாறு புலவர்கள் அரிய பல உண்மைகளை எவ்வழியும் செவ்வையாக இனிது போதித்திருக்கின்றனர்.

இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்நாட்டில் இருந்த கவிஞர்கள் நானூற்றுஎண்பது பேர் நமக்குத் தெரிய வந்துள்ளனர். அவர்கள் அருளியுள்ள பொருள் மொழிகள் அறிவின் ஒளிகளாய்ச் சுவை சுரந்துள்ளன; அவை யாவும் இங்கே அறிந்து கொள்ள நேரின் இந்நூல் விரிந்து பெருகும் ஆதலால் விலக நேர்ந்தது.

பொருளும் புகழும் அருளோடு அடைந்து இவ்வுலகில் எவ்வழியும் செவ்வையாக இனிது வாழ்ந்து மனித இனம் புனித நிலையில் உயர வேண்டும் என்றே தரும நீதிகளைக் கவிஞர் உரிமையோடு போதித்துள்ளனர். அவ்வாறான இனிய போதனை முறைகள் அறிவுநலங்கள் சுரந்து விழுமியநிலையில் வழிமுறையேவந்திருக்கின்றன. ஒன்று அயலேவருகின்றது.

பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்!
தெய்வம் தெளிமின்! தெளிந்தோர்ப் பேணுமின்!
பொய்யுரை அஞ்சுமின்! புறஞ்சொற் போற்றுமின்!
ஊன்ஊண் துறமின்! உயிர்க்கொலை நீங்குமின்!
தானம் செய்மின்! தவம்பல தாங்குமின்!
செய்ந்நன்றி கொல்லன்மின்! தீநட்பு இகழ்மின்!
பொய்க்கரி போகன்மின்! பொருள்மொழி நீங்கன்மின்!
அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின்!

பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்!
பிறர்மனை அஞ்சுமின்! பிழைஉயிர் ஓம்புமின்!
அறமனை காமின்! அல்லவை கடிமின்!
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்!
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா;
உளநாள் வரையாது; ஒல்லுவது ஒழியாது;
செல்லும் தேளத்துக்கு உறுதுணை தேடுமின்!
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கு. (சிலப்பதிகாரம்)

உலக மாந்தரை நோக்கி இளங்கோவடிகள் இங்ஙனம் உரைத்திருக்கிறார். இவர் சேர மன்னர்மரபினர். கோவலன் சரிதையை உலகம் ஆவலோடு அறிய ஒரு சிவிய காவியமாப் பாடியிருக்கிறார். சிலப்பதிகாரம் என்னும் பேரால் அது விளங்கி வருகிறது. அந்தக் காவியத்தைப் பூர்த்தி செய்து முடித்துவிட்டு முடிவில் இப்படி அறிவு நலங்களைத் தொகுத்து அற்புதமா அளித்துள்ளார். தமிழ் மொழியில் பெரும் புலமையுள்ள இக் கவிஞர் தமிழ் மக்களுக்கு மாத்திரம் கூறாமல் உலகம் முழுவதுக்கும் ஒருங்கே விழுமிய நீதிகளைப் போதித்திருக்கிறார். மல்லல் மா ஞாலத்து வாழ்வீர் என உலக மாந்தர் யாவரையும் உரிமையோடு எதிர்முகமா அழைத்து இவ்வாறு உறுதி நலங்களை உணர்த்தியுள்ளார். கவிஞர்களுடைய பரந்த நோக்கமும், விரிந்த காட்சியும் சிறந்த மாட்சியும் உயர்ந்த எண்ணமும் உள்ளப் பண்பும் எல்லாரும் இன்புற்று வாழ வேண்டும் என அன்புற்று அறிவு நலங்களை ஆர்வத்தோடு அவர் அருளிவரும் அமைதியும் அதிசயநிலையில் ஒளிபுரிந்து உவகை சுரந்துமிளிர்கின்றன.

மனிதன் இனியனாய் வாழ வேண்டிய புனித நிலைகள் கவிகளில் சுவையாய் வெளி வந்துள்ளன. பிறவுயிர்களுக்கு

எவ்வழியும் இதம் புரிந்து வாழ்ந்து வருவதே உத்தம வாழ்வாய் உயர்ந்து வருகிறது. அவ்வாறு வாழ்ந்து வருபவன் உயர்ந்த மேன்மகனுய் ஒளி பெற்று வருகின்றுன்.

வசையில் செல்வ! வான வரம்ப!
பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கு என வாழ்திநீ. (பதிற்றுப்பத்து, 4)

ஒரு சேர மன்னனைக் குறித்துக் காப்பியாற்றுக் காப்பியனுர் என்னும் கவிஞர் இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார். தன் செல்வத்தைப் பலர்க்கும் உதவி எவர்க்கும் இனியனுய் அவன் வாழ்ந்து வந்துள்ள இனிய வாழ்க்கை நிலையை இதில் ஓர்ந்து உணர்ந்து நாம் உவந்து கொள்கின்றேம்.

"தனக்கு என வாழாப் பிறர்க்குரி யாளன்." (அகம்,54)

பண்ணன் என்னும் ஒரு குறுநில மன்னனுடைய நீர்மையை இது குறித்துள்ளது. பிறர் இன்புற்றுவாழ அவன் அன்புற்றுவந்த உண்மையை இதனுல் அறிந்து மகிழ்கிறேம்.

தன் உயிரினும் மன்னுயிரைப் பேணி வருவது எவ்வளவு பெருந்தகைமை! அயலாருடைய சுக துக்கங்களை யாதும் கவனியாமல் தன்னுடைய சுயநலமே கருதி வருபவன் உயர் நிலையை அடையான். பிற உயிர்கள் உவந்து வர உயிர் வாழ்ந்து வருபவனே உயர்ந்த புண்ணிய சீலனும் உத்தம நிலையை அடைகின்றுன். எவ்வுயிர்க்கும் இரங்கி அருள்வது திவ்விய மகிமையாய்த் திகழ்ந்து வருகின்றது.

தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. (குறள், 212)

ஒருவன் முயன்று ஈட்டுகிற பொருள்கள் எல்லாம் நல்லவர்களுக்கு உதவி செய்யவே யாம் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். உணர்வுரை உறுதி புரிந்துள்ளது.

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே;
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே." (புறம், 189)

உலகம் முழுவதையும் ஒருகுடை நிழலில் தனி உரிமையா ஆளும் அரசனே ஆனாலும், யாதும் இல்லாத இழிந்த வறியனே எனினும் உண்பதிலும் உடுப்பதிலும் சிறிது எற்றத்தாழ்வாய் நாள்கள் கழிந்து போகின்றன. சிறந்த மேன்மைகள் அந்த அரச வாழ்வில் அமைந்தில. பின்னர் உயர்ந்த மகிமைதான் யாது? எனின், பிற உயிர்களுக்கு இரங்கி உதவும் அந்த உபகார நிலையிலேயே எல்லா உயர்வுகளும் உறைந்துள்ளன; அவ்வாறு இதம்புரிந்தே மனிதன் உயர்ந்துகொள்ளவேண்டும்என நக்கீரர் இங்ஙனம் உரைத்திருக்கிறார்.

மனித இனம் இனிது வாழ்ந்து தனிமகிமைகளை அடையும் நிலைகளைக் கவிஞர்கள் சுவையாக உணர்த்தியுள்ளனர்.

"Poets are the hierophants of an unapprehended inspiration." [Shelley]

"கவிஞர் தெய்வத்தன்மை வாய்ந்த திவ்விய போதகர்" என மேல் நாட்டாரும் இங்ஙனம் உரைத்திருக்கின்றனர்.

இந்நாட்டுக் கவிஞர் நிலைகளை ஓரளவு இந்நூல் காட்டியுள்ளது. கருதிக் கண்டு உறுதிநலங்களை ஓர்ந்துகொள்ளுக.

வையம் இன்புற வந்து கலைகளை
ஐயம் இன்றி அறிந்து தெளிந்துயிர்
உய்ய அன்பின் உணர்வுகள் செய்துள
செய்ய மேதைகள் சேவடி சேவிப்பாம்.